

# ஸப்தகிரி

டிசம்பர், 1984

விலை ரூ. 1/-

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



தமேவ சரணம் கச்ச ஸர்வபாவேன பாரத ।
தத் ப்ரஸாதாத்பராம் சாந்திம் ஸ்தானம் பராப்ஸ்யஸி சாச்வதம் ।।
(18—62)

அர்ஜுனா, எல்லாப் பாங்கிலும் அவனையே தஞ்சமடை. அவனருளால் மேலாம் சாந்தியும் நிலைத்துள்ள வீடுபேறும் பெறுவாய்.

டிசம்பர், 1984

# ஸப்தகிரி

இதழ் 7 மலர் 15

தனிப்பிரதி ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

உள்ளுறை



அட்டைப்பட விளக்கம்

முகப்பில் : கோதை நாச்சியார்.

பின்னட்டையில் : ஸ்ரீ வில்லிபுத்தூர் ஆண்டாள் கோயில்.

இரண்டாவது : திருமலையில் இந்தியப் பிரதமர்.

மூன்றாவது : திருமலையில் ஆந்திர முதல்வர்.

சிறப்பாசிரியர்
திரு. எஸ். லக்ஷ்மிநாராயண I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்.
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
THE WELFARE OFFICER
Publication Section, T.T.D.
K. T. Road,
TIRUPATI.

# உங்களுடன்....

அறுசுவை உண்டியும், ஆறடுக்கு மாளிகை வாசமும் மட்டுமே ஒருவனுக்கு மன நிம்மதியினைத் தந்து விட்டால், மானிடனுக்கு வைகுந்த வாழ்வு எதற்கு? கைலயம்பதிக்கு வழி எதற்கு? ஆம், சமயம் தோன்றுவதற்குச் சமயமே இருந்திருக்காது. ஆனால் பிரச்சனைகளுடனும், குறைபாடுகளுடனும் மனிதன் பிறந்து விடுகின்றானே! அப் போதே இறையுணர்வும் தோன்றி விடுகின்றது. அவ்வாறு தோன்றிடும் உணர்வினைச் செம்மைப்படுத்தி, நெறி படுத்தித் தம்மைத் தாமே பண்படுத்திக் கொள்வர் சிலர். தாம் மட்டுமல்லாது தன் இனமும் மேம்பாடு அடைய இறை உணர்வினைத் தன்னைச் சுற்றிலும் பரவவிட்டுச் செல்வர் சிலர். முன்னவரை நாம் ஞானிகள், முனிவர்கள் என்று கூறினால், பின்னவரை அடியார்கள் என்று கூறிடலாம். வேத கால ரிஷிகளாலும், முனிவர்களாலும் இயற்றப்பட்ட இதிஹாஸங்களும், புராணங்களும், காவியங்களும் ஒரு தலை முறையினருக்கு மட்டுமே, ஒரு குறிப்பிட்ட தகுதியுடையவருக்கு மட்டுமே பயன்பட்டபோது, அவை கூறிட்டத் தத்துவக் கருத்துக்களையும், ஆன்மீக வழிமுறைகளை யும் எளிதில், விரைவில் சாதாரண மனிதனும் விளங்கிக் கொள்ளும் வகையில் அவரவர் மொழிகளில் இசை வடிவில் தந்திட்டனர் பின் வந்த ஆழ்வார்கள், நாயன்மார்கள் போன்ற மெய்யடியார்கள்.

இது போன்று முனிவர்களும், இறையடியார்களும் தந்திட்ட சமய இலக்கியச் செய்திகளை நாம் வெறும் குப்பை என்று ஒதுக்கிவிட்டால், நமது வாழ்க்கை, பிரச்சனைகளின் புகலிடமாகத்தான் அமையும். நமது கலா சாரத்தின் பெருமையே நமது சமயமாகும். ஏனெனின் வாழ்க்கையின் அடிப்படை அமைப்புக் கூறுகளைத் தன்னகத்தே கொண்டு, 'நாம் யார்' 'நமது கடமை யாது' 'நமது எதிர் காலம் என்ன" போன்ற கேள்விகளுக்கு கருத்தாழம் மிக்க பதில்களை வைத்துக் கொண்டு நம்மை நெறிபடுத்தி வாழ்வாங்கு வாழ வழிவகுத்து சென்றனர் முற்றும் துறந்த - இல்லை, இல்லை முற்றும் உணர்ந்த-நமது தவ முனிவர்கள். நமது புராணங்கள் நமக்கு நமது பொருளியல் வாழ்க்கையின் உண்மையை உணர்த்திடடாலும் அவற்றை அனுபவிக்க நமக்கு அடிப்படைத் தேவை ஆன்மீக அறிவுதான் என்பதை மனதிற் கொண்டு, வாழ்க்கை ரகசியத்தை விளக்கிடும் வேதங்களின் சாரமான கீதையை தந்திட்டனர். இக்கீதையின் அறிவார்ந்த கருத்துக்களை நமக்குத் தெள்ளத் தெளிந்த, நம்மொழி யில் தந்திட்டார் கோதையார்.

கீழை நாடடின் கலாசாரத் தூணாக விளங்கிடும் பாரதத்தின் பெருமையினை மேலை நாட்டார்க்கு உணர்த்திக் காட்டிய பெருமை கீதைக்கே உரியது. பேரறிவின் பெட்டகமாக, இறைவனின் குரலாக, ஆன்மீகக் கலாசாரத்தின் எதிரொலியாக, உலகத்தின் உயிர் மூச்சாக கீதை அமைந்துள்ளது. வாழ்க்கை எனும் போர்க் களத்தில் மனிதனின் நிலையும், அவன் ஆற்ற வேண்டிய பணியினையும் விளக்கும்முகத்தான் கீதையும் ஒரு போர்க்களத்தில்தான் உபதேசிக்கப்பட்டது. அப்போது கூறப்பட்ட வாழ்க்கை உண்மைகள், ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா அர்ஜுனன் வாயிலாக மனிதனுக்குக் கூறப்பட்டவையாகும் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் ஆன்மீகத்திற்கும் உலகியலுக்கும் ஏற்படும் போராட்டங்களைக் கீதை தீர்த்து வைக்கின்றது. போர்க்களம்தான வாழ்க்கை. உடல் தான் தேர். நம் உள்ளமே அர்ஜுனன். இந்திரியங்களாம் அத்தேரில் பூடடப்பட்ட குதிரைகள். அக்குதிரைகளை அடக்கு பவன்தான், தேரோட்டியான கண்ணபெருமான். ஐந்தாயிரம் ஆண்டுகளுக்குமுன் கூறப்பட்ட இக்கீதையின் விளக்கம் இன்றைய மனிதனுக்குப் புரியாமற் போகலாம். அந்த ஒரு நிலை நமக்கு இருந்திடக் கூடாது என்பதற் காகத்தான், அக்கீதையின் சாரத்தை தெள்ளு தமிழில் ''வேதம் அனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழ்'' என்று போற்றப்படும பாவைப பாடலகளைத் தந்திட்டாள் ஆண்டாள்.

கீதையில் முக்கியமாகக் கருதபபடும் சரம ஸ்லோகம கூறும் சரணாகதித் தத்துவத்தை, ஆண்டாள் ''செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த மெய்மைப பொருவார்த்தை விடடு சித்தர் கேட்டிருப்பர்'' எனும் தொடரால் விளக்குகின்றாள். வேதஙகளுக்கு உபநிஷத்துக்கள் போல, ஐந்தாம் வேதமாகிய பாரதத்திற்கு கீதை உபநிஷத் போல, திராவிட வேதமான நாலாயிர திவய பிரபந்ததிற்கு திருப்பாவை ஓர் உபநிஷத்தாகும். கீதை யில் கூறபபட்டுள்ள கர்ம, ஞான, பக்தி ஸ்வரூபம் திருபபாவையில் நோன்பு எனும் க்ரியை மூலமாகவும், கோபி யர்களின் அனுஷ்டானத்தின் வாயிலாகவும் தெளிவாக்கப்படுகின்றது இவ்வகையில் பொருள், விஷயம், அனு பவம் என்ற நிலைகளில ஒற்றுமை கொண்டுள்ள கீதையும், பாவையும் வயது, இனம், சமயம் போன்ற பாகு பாடின்றி எல்லோருக்கும் ஓர் இறையுணர்வினை ஏற்படுத்தியுள்ளன. இவ்இறை உணர்வே நம்மை நாம் அறிந்து கொள்ளவும், நம்மை அறிவதன்மூலம், நம்மைப் படைத்தவனின் அருட்திறத்தையும் உணர முடியும். அவ்அருட் திறத்தால் அன்பு, இரக்கம், நேர்மை, கடமை, பொறுமை போன்ற பெருங்குணங்களைப் பெற்று நாம் 'மனிதனுக வாழ்" வழி அமைத்துக் கொள்ள முயலுவோமாக.

# செய்திச் சுருக்கம்



ஆந்திர மாநில முன்னாள் அறநிலையத்துறை ஆணையர் திரு. எஸ். லக்ஷ்மிநாராயணா அவர்கள் அண்மையில் தி. தி. தேவஸ்தானத்தின் புதிய செயலாட்சித் தலைவராக பதவி ஏற்றுள்ளார்.

## கீதை ஜெயந்தி

திருப்பதியில் தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் 30—11—84 முதல் 4—12—84 வரை 5 நாட்களுக்குக் கீதை ஜெயந்தி வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. தி. தி. தேவஸ்தான இந்து தர்ம ரக்ஷண சமஸ்தாவின் ஆதரவில் நடைபெற்ற இவ்விழாவிற்கு வருகை புரிந்தோரை சமஸ்தாவின் செயலாளர் திரு. எஸ். லக்ஷ்மணய்யநாயுடு அவர்கள் வரவேற்க, ஸ்ரீதயானந்தசுவாமிகள் கீதை பற்றிய சிறப்புச் சொற்பொழிவுகள் ஆற்றினார். விழாவின் இறுதி நாளன்று, கீதை சம்பந்தப்பட்ட பல்வேறு போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவ மாணவிகளுக்கு, தி. தி. தே. செயலாட்சித்தலைவர் திரு. எஸ். லக்ஷ்மிநாராயணா அவர்கள் பரிசுகள் வழங்கினார்.

## கண் சிகிச்சை முகாம்

இவ்வாண்டும் தி. தி. தேவஸ்தான ஆதரவில் 5—1—85 முதல் 11—1—85 வரை இலவச கண் அறுவை சிகிச்சை முகாம் ஒன்று, திருப்பதியில் தி.தி. தேவஸ்தானத்தாரின் -வது தர்ம சத்திரத்தில் நடைபெறும். இச் சிகிச்சையின் போது அனுமதிக்கப் படும் நோயாளிகளுக்கு இலவச உணவும், தங்கும் வசதியும் அளிக்கப் படும். இவ்அறுவை சிகிச்சைமுகாம் புகழ்பெற்ற கண் மருத்துவர் டாக்டர் பி. சிவாரெட்டி அவர்களின் மேற்பார்வையில் நடைபெறும்.

## சுவாமி ரங்கனானந்தா

ஹைதராபாத் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த சுவாமி ரங்கனானந்தா அவர்கள் 29—11—84 அன்று திருப்பதிக்கு வருகை புரிந்தார். அன்று பகல் திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் உடல் ஊனமுற்றோர் பயிற்சி மருத்துவ மனைக்கு வருகை புரிந்து, தி. தி. தேவஸ்தானம் மற்றும் திருப்பதி சத்தியசாயி சேவா சங்கத்தின் சார்பில் அறுபது உடல் ஊனமுற்ற நோயாளிகளுக்கு இலவசமாக செயற்கை கை, கால் உறுப்புக்களை வழங்கினார். அன்று மாலை தி. தி. தேவஸ்தான நிருவாகக்கட்டடத்தில், ஊழியர்கள் கலந்து கொண்ட கூட்டத்தில் சுவாமிகள் ''சேவா தர்மம்'' எனும் தலைப்பில் சொற்பொழிவாற்றுகையில், பொதுவாழ்க்கையில் மனிதாபிமானம், அன்பு ஆகியவற்றின் முக்கியத்துவத்தை விளக்கிக் கூறினார். சுவாமிகளின் ஆங்கில உரையினை தி. தி. தேவஸ்தான இணை செயலாட்சித்தலைவர் திரு. டி. சுப்பராயலு அவர்கள் தெலுங்கில் மொழிபெயர்த்தார். இவ்விழாவில் முன்னாள் ஆந்திர மாநில தலைமைச் செயலர் திரு. விட்டல் அவர்களும் பங்கேற்றார்.

## திருச்சானூரில் ஆளுநர்

அண்மையில் திருப்பதி அருகே உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் திருச்சானூர் ஸ்ரீபத்மாவதித் தாயார் கோயிலில் நடைபெற்ற பஞ்சமிதீர்த்தம் வைபவத்திற்கு ஆந்திர மாநில ஆளுநர் திரு. சங்கர் தயாள்சர்மா அவர்கள் தன் குடும்பத்துடன் வருகை புரிந்தார்.

## திருமலையில்

இந்தியப் பிரதமர் திரு. ராஜீவ் காந்தி அவர்கள் 2—12—94 அன்று திருமலைக்கு வருகை புரிந்து கோயிலில் நடைபெற்ற பல்வேறு வைதிகச் சடங்களில் பங்கேற்றார். இது சம்பந்தப்பட்ட புகைப்படங்கள் இம்மாத இதழின் முதல் உள் அட்டைப்பக்கத்தில் வெளியிடப்பட்டுள்ளன.

அண்மையில் ஆந்திர மாநில முதல்வர் திரு. என். டி. ராமாராவ் அவர்கள், அம்மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. முத்துகிருஷ்ண நாயுடு அவர்களுடன் திருமலைக்கு வருகை புரிந்து, இறைவனைத் தரிசித்தார். இது சம்பந்தப்பட்ட புகைப் படங்கள் இவ்இதழின் °-வது உள் அட்டைப் பக்கத்தில் வெளியிடப் பட்டுள்ளன.

## அடிக்கல் நாட்டு விழா

அண்மையில் ஆந்திர மாநிலத்தில் பெனுகொண்டா மாவட்டத்தில் கோதாடா மற்றும் மட்லபள்ளி ஆகிய ஊர்களில் தி. தி. தேவஸ்தானத்தாரின் திருமண மண்டபங்களுக்கு முறையே தி. தி. தேவஸ்தான மேலாண்மைக்குழுத் தலைவர் திரு. வி. கே. டி. வி. ராஜு அவர்களும், குழு உறுப்பினர் திரு. என். நரசிங்க் நாயக் அவர்களும் அடிக்கல் நாட்டினர். இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவின்போது குழுத்தலைவர் பேசுகையில், தற்போது மாநிலத்தில் 60 திருமண மண்டபங்கள் கட்டப்பட்டு வருகின்றன என்றும், மேலும் 50 திருமண மண்டபங்கள் கட்ட முடிவு செய்யப் பட்டுள்ளது என்றும் குறிப்பிட்டார்.

---

சென்ற இதழில் 5-ம் பக்கத்தில் வெளியிடப்பட்டுள்ள ''திருவேங்கட மலை வரலாற்றுமாலை'' எனும் தொடர் நூலின் ஆசிரியர் பெயர் 'வித்துவான் தி. அ. கிருஷ்ணமாச்சாரியர்' என்பதற்குப் பதிலாக நாவல்பாக்கம் ஸ்ரீ தேவநாதாச்சாரியர் என்று தவறுதலாக பிரசுரிக்கப் பட்டுள்ளமைக்கு மன்னிக்க வேண்டுகிறோம்.

---

# கெட்டவனும் அவன் புத்தியும்

குரு க்ஷேத்திரத்தில் நடந்த மகா பாரத யுத்தம் ஒரு விதமாக முடிந்து விட்டது. தர்மம் அதர்மத்தை வென்றது. மெய் பொய்யைத் தோற்கடித்தது. நியாயம் கொடி பிடிக்க நீதி நிலைநாட்டப்பட்டது. பீஷ்மர் சூரியன் வடதிசையில் அடையும் உத்தராயண புண்ணிய காலத்தை எதிர்பார்த்து தன்னு டைய உயிரை விடுவதற்காகப் போர்க்களத்தில் அம்புப்படுக் கையின் மீது படுத்துக் கொண்டிருக் கிறார். கௌரவர்களின் பக்கம் சாய்ந் திருந்த பீஷ்மர் தன் வாழ்வின் இறுதிக் கட்டத்தில் இருந்தார். பீஷ் மரின் அந்திம நேரத்தில் அவரைக் காண தர்மதேவரும் அவருடைய அன்புத் தம்பிகளும், தர்மபத்தினி திரௌபதியும்குருக்ஷேத்திரத்திற்குச் சென்றனர்.

பாண்டவர்களும், திரௌபதியும் சிறந்த ஞானியான பீஷ்மரை வணங் கினர். தர்மர் பீஷ்மரிடம் சத்தி யம், தர்மம், நியாயம், நீதிபரிபால னம் ஆகியவைகளைப் பற்றியக் கேள் விகளைக் கேட்க, பீஷ்மர் எல்லாவற் றிற்கும் ஏற்றபடி விளக்கங்களைக் கூறித் தெளிவாக்கினார்.

தர்மதேவருக்கு பீஷ்மர், தர்மம், நியாயம், சத்தியம் ஆகியவைகளைப் பற்றி உபதேசம் செய்துகொண்டி ருக்கும்பொழுது திடீரென்று திரௌபதி ''களுக்'' என்று சிரித்து விட்டாள்.

திரௌபதி சிரித்த சிரிப்பின் ஒலி பீஷ்மரின் காதுகளில் விழுந்து விட் டது. உடனே அவர் தாமோப தேசத்தை பாதியில் நிறுத்திவிட்டு திரௌபதியைப் பார்த்து ''மகளே! ஏனம்மா சிரித்தாய்?'' என்றார்.

தான் சிரித்ததை பீஷ்மர் கவ னித்து தம்மிடம் கேட்டு விட்டாரே என்பதை அறிந்து திரௌபதி மிக வும் வெட்கமடைந்தாள் உடனே தலையைத் தாழ்த்திக்கொண்டு, ''பிதாவே! அறியாமல் சிரித்து விட் டேன். தயவு செய்து மன்னித்து விடுங்கள்!'' என்று வேண்டினாள்.

பீஷ்மராகிய பிதாமகர் திரௌ பதியின் பதிலால் திருப்தி அடைய வில்லை. அவர் மீண்டும், ''குழந் தாய்! பெரியவர்கள் கூடிய இடத் தில் நற்குலப் பெண்கள் நகைக்க மாட்டார்கள். நீயோ நற்குலத்தில் பிறந்து கற்பு நெறியில் சிறந்து நல்ல அறிவு பெற்றவள். காரணம் ஏதும் இல்லாமல் உனக்குச் சிரிப்பு வராது. சத்தியத்தைப் பூஜிக்கும் தர்மதேவனின் தர்மபத்தினியாகிய நீ உண்மையாகவே காரணம் இல்லா மல் சிரிக்க மாட்டாய்! எனவே பயப்படாமலும், வெட்கப்படாம லும் சிரித்ததன் காரணத்தை சொல் லம்மா?'' என்று சற்று நிதானத்து டன் கேட்டார்.

திரௌபதிக்கு இக்கட்டான நிலைமை ஏற்பட்டு விட்டது. உண் மையைக் கூற வேண்டும். அதுவும் மறைக்காமல் உடனே கூற வேண் டும். பெரியவர் அனுக்கட்டளை இட்டுவிட்டார். சொல்லாமல் இருந்தாலோ, பொய்யைச் சொன் னாலோ பெரும்பழி தம்மீது விழுந்து குலப்பெருமை அழியும் என்பதை உணர்ந்துக்கொண்ட திரௌபதி பணிவுடன் கூறினாள்.

''சுவாமி! தாங்கள் இப்போது இங்குள்ள அனைவருக்கும் புரியும்படி தர்மத்தைப் பற்றியும், நியாயத் தைப் பற்றியும் விளக்கினீர்கள். அப்பொழுது என் மனதில் ஒரு சந் தேகம் எழுந்தது. இப்பொழுது தர்மத்தைப் பற்றியும், நியாயத் தைப் பற்றியும் சிறந்த விளக்கங் களைக் கூறும் நீங்கள் கௌரவர் சபையில் இருந்தபொழுது ஒருநாள் துச்சாதனன் என்னை மானபங்கப் படுத்த முயன்றபொழுது தாங்கள் ஏதும் பேசாமல் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தீர்கள். இப்போது இவ்வளவு தர்மம் நியா யம் பேசும் பீஷ்மாச்சாரியார் இந்த ஞானத்தை எல்லாம் அந்த வேளை யில் எங்கே விட்டு வைத்திருந்தார்? அல்லது ஒருவேளை இந்த தர்ம விஷ யங்களை பிறகு அறிந்திருக்கலாம் என்று நான் நினைத்தேன். இதை நினைத்த உடனே எனக்குச் சிரிப்பு வந்து விட்டது. என்னை மன்னித்து விடுங்கள்''.

நலலம்பள்ளி-என. ஆர். ஜெயசந்திரன், பி. காம்.,

காவேரிப்பாக்கம்.

பாஞ்சாலி கூறிய பதில், அவ ளுக்கு இருக்கும் புத்தி கூர்மையை பீஷ்மருக்கு விளக்கியது. அவர் அவளைப் பார்த்து அமைதியாக பதில் கூறினார்.

''புத்திசாலிப் பெண்ணே! உன் அறிவுக்கூர்மையை எண்ணி நான் உண்மையில் பெருமைப்படுகிறேன். உன்னுடைய கேள்வி நியாயமானக் கேள்வியே. நியாயமானக் கேள்வி யைக் கேட்ட உன்னை மன்னிப் பதற்கு பதில் உன்னைப் பாராட்ட வேண்டும். துரியோதனன் சபை யில் நான் இருக்கும்பொழுதே எனக்கு தருமம், சத்தியம், நியாயம் ஆகியவைகளைப் பற்றிய அறிவு நிறையவே இருந்தது. அவைகளை

# புதிர் புரிந்தது!

உஜ்ஜயினியை விக்கிரமாதித்தன் பெரும் புகழுடன் அரசாண்ட காலம். புரந்தர நகரிலே ஒரு வைசியன் வாழ்ந்து வந்தான். அவன் பெயர் தனஞ்செயன். பெயருககேற்றபடி மிக்கப் பொருளை சம்பாதித்துக் கொண்டு வைத்திருந்தான். பொன்னும், பூமியும், மணியும், பசுவும் ஏராளமாக இருந்தன. அவனுக்கு நானகு குமாரர்களிலிருந்தனர். அவர்களையும் கண்ணுங்கருத்துமாகப் பேணி வளர்த்து வந்தான்.

தனஞ்சயன் நோய்வாய்ப்பட்டான். இறக்கும் தருணத்தில் தன் நான்கு குமாரர்களையும் அருகில் அழைத்து, "குமாரர்களே! இதுவரை உங்களை யாது குறையுமின்றி வளர்த்து விட்டேன். என் ஆதரவில் நீங்களும் சுகமாக இருந்து வந்திருக்கிறீர்கள்! உங்களுக்கு நான் ஆஸ்தியும் வைத்து விட்டுத்தான் போகிறேன். நான் படுத்திருக்கும் இந்தக் கட்டில் கால்கள் நான்கிற்கும் கீழே திரவியங்கள் இருக்கின்றன! என்னுடைய இறுதி மூச்சுக்குப் பிறகு, அவைகளையெடுத்து, நீங்கள் நால்வரும் பங்குப் போட்டுக்கொண்டு சுகமாக வாழ்வீர்களாக! என்றான்.

தம் தந்தையார் இறந்தபின் அவருக்குரிய சடங்குகளைச் செவ்வனே செய்து முடித்தபின், புத்திரர் நால்வரும் கட்டில் கால்களை வெட்டிப் பார்த்தார்கள்! நான்கு பைகளைத்தான் கண்டனர்! பைகளை ஒவ்வொன்றாகப் பிரித்துப் பார்த்தனர். ஒன்றிலே மண்! ஒன்றிலே உமி! ஒன்றிலே சாணம்! ஒன்றிலே பொன்! ஒன்றுமே புரியவில்லை அவர்களுக்கு! மண்ணும், உமியும், சாணமும் எவ்விதம் திரவியங்கள் ஆகும். இவையனைத்தும் எதற்கு? எனவே இதற்கு விளக்கம் தேடி, சான்றோரிடம் கேட்க, அவர்களுக்கும் ஒன்றுமே புலப்படாமையால், விக்ரமாத்திய மன்னனிடமே சென்று விவரங்களைக் கூறி, இந்தப் புரியாத புதிருக்கு விளக்கம் கேட்டார்கள்!

விக்ரமாதித்ய மன்னனும், மதியூகமந்திரிகளும் தம் மூளையைக் குழப்பிக் கொண்டும், முடிவு காண இயலவில்லை! அவர்களுக்கும் இந்தப் புதிருக்குப் பொருள் விளங்காமல் தவிக்கவே, நால்வரும் மனம் வருந்தித் தமது ஊருக்குத் திரும்பலாயினர்!

வழியில் குலாலர்கள் (குயவர்கள்) வீதி தனில் ஓர் ஐந்து வயதுச் சிறுவன் ஒருவன் மற்ற பிள்ளைகளுடன் விளையாடிக் கொண்டிருந்தான். அச்சிறுவன் மகாமேதை! இளமையிலேயே அறிவு முற்றப் பெற்றவன். அவன் பெயர்தான் சாலிவாகனன் என்பது. அவன் பெயராலே ஒரு சகாப்தமே நிலவியிருக்கிறது! அச்சிறுவன், அந்த நான்கு பேர்களும் தம் குறைகளைப்பற்றிப் பேசிக்கொண்டு போனதைக் கவனித்துக்கேட்டுக் கொண்டிருந்தான். அந்த நானகு பேர்களையும் தன்னருகில் வரும்படி அழைத்து, அவர்களிடமிருந்த பைகளை வாங்கிக் கொண்டான். அப்பைகளிலிருந்தனவற்றைப் பார்த்துவிட்டு ஒரே நொடியில் புதிரை 'விடுவித்தான்'! 'மண்ணிருந்த பை நிலத்தையும், உமியிருந்த பை தானியவகைகளையும், சாணம் மாடுகன்றுகளையும், பொன் தங்கக்காசுகள ஆபரணங்களையும் குறிக்கின்றன! இந்தத் திரவியவகைளைத் தங்களுக்குள் பிரித்து எடுத்துக்கொள்ளும்படி, தந்தையார் குறிப்பாலுணர்த்தி வைத்துப் போனாரென்று புதிருக்கு விளக்கமளித்தான சாலிவாகனன் என்ற சிறுவன்! புதிர் புரிந்தது!

மயூரப்ரியா-சீர்காழி

நான் ஒருபோதும் அறியாதவனல்ல. ஆயினும் துஷ்டனான துரியோதனனின் உணவை நான் உண்டு வாழ்ந்து வந்தேன். அது காரணமாக என் அறிவு மழுங்கி நன்மை எது? தீமை எது? நியாயம் எது என்பது பற்றி ஆலோசிக்கவும், சிந்திக்கவும், என்னால் முடியாமல் போய் விட்டது. தீயவர்கள் செய்யும் செயல்கள் மட்டும் கெட்டவையல்ல. அவர்கள் அளிக்கும் உணவும்கூட கெட்டதுதான். அந்த உணவு கெட்ட புத்தியையேத் தரும். கெட்டவன் கொடுக்கும் உணவும் கெட்ட புத்தியையேக் கொடுக்கும் என்று வேத நூல்கள் கூறுகின்றன.

ஆனால் இப்போது குருசேஷத்திரத்தில் நடந்த மகாபாரதப் போரில் அர்ஜுனன் என் மீது அம்புகளை எறிந்தான். தர்மத்திற்காகப் போரிட்டவனின அம்புகள் அதர்மத்திற்காக வாதாடிய என்னுடைய உடலை நன்கு துளைத்து விட்டன. துளைக்கப்பட்ட துவாரங்களின் வழியாக உடலில் இருந்த எல்லா இரத்தமும் வெளியேறி விட்டது. கெட்டவன் துரியோதனனின் உணவை உண்டதனால் உடலில் உண்டான கெட்ட இரத்தம் ஒரு சொட்டுக் கூட உடலில் இல்லாமல் அனைத்தும் உடலை விட்டு வெளியேறி விட்டது. அதனால் என் புத்தி இப்பொழுது தெளிந்து தூய்மையாகி விட்டது. ஆகையால்தான் நான் இப்பொழுது தர்மத்தைப் பற்றியும், சத்தியத்தைப் பற்றியும், நியாயத்தைப் பற்றியும் உள்ள தத்துவங்களை விரிவாகவும், தெளிவாகவும எடுத்துச் சொல்ல முடிந்தது''.

பெரியவர் பிதாமகரின் விளக்கம் அங்கு இருந்த திரௌபதைக்கு மட்டுமல்ல தர்ம தேவருக்கும் அவரது தம்பிமார்களுக்கும் உணவின் உண்மையை விளக்கியது.

# நவரத்தினங்களின் சிறப்பு

மனித நாகரீகம் வளர்ச்சியுற்ற ாலத்திலிருந்து தற்காலம் வரை வரத்தினங்களை மககள் அணிகலன் ளாகவும், ஆணடவனின் திருமேனி ல் அலங்கரித்தும் சந்தோஷம் ‌டைகின்றனர். அந்த நவரத்தின ானது நீலம், கோமேதகம், வைடு யம், வைரம், மாணிக்கம், முத்து, ட்பராகம், மரகதம், பவளம் முத ியன. இந்த அதிவிசேஷமான நவ ணிகளை தெரிந்து அறிந்து கொள் ்து பயனுடையதாகும்.

**திலும் ஒன்பது**

சிவபெருமான் ஒன்பது வகையான ‌ருவங்களுடன் விளங்குகின்றார். ஆகவே நவந்தருபேதம் என்றும் ாத்திரங்கள்கூறுகின்றன. பிர்மமா, விஷ்ணு, உருத்திரன், மகேசுரன், தாசிவம், சிவம், சக்தி, நாதம், பிந்து என்பனவாம.

நவநாத சித்தர்களாக விளங்கும் அநாதிநாதர், ஆதிநாதர், கடேந்திர நாதர், கோரக்கநாதர், சதோக நாதர், சத்தியநாதர், மச்சேந்திர நாதர், மதங்கநாதர், வகுளிநாதர் என்பவராவார்கள்.

மேகங்களில் ஒன்பதும், நாகங் களில் ஒன்பதும், நிதிகள் ஒன்பதும, யோக வகையில் ஒன்பதும், புண்ணி யங்களில் ஒன்பதும், உலோகங்களில் ஒன்பதும் இதுபோலவே நவமணி களும் மக்களுடைய துன்பத்தைத் தீர்ப்பதற்கு மணி மந்திர ஔஷதங் கள் பயன்படும் என்று சொலலுவார் கள் மணி என்பது சோதிடத்தைக் குறிப்பது என்று சிலர் கூறுவார்கள். இன்ன வகையான தீங்குக்கு இன்ன மணியை அணிந்தால் நலம் என்று சொல்லுவதும் உண்டு.

**நவமணிகளும் மக்களின் தீர்ப்பும்**

நவமணிகளின் இயல்புகளை நன்கு அறிந்து அவற்றைச் சாதி பிரித்தும் குணங்கள் பிரித்தும், வேறுவகையில் இனப்படுத்தியும் பலவகையான அமைபபுகளை நூல்களில் பேசப்படு கின்றன. மக்களில் அந்தணர், அர சர், வணிகர், வேளாளர் என்னும் நான்குசாதிகள் வழங்கப்படுகின்றன. அதனைப்போன்று வகை, நிறம்,திறம் ஆகியவற்றைப் பொறுத்து மணி களும் இருப்பதாகக் கூறுவர் பெரி யோர்.

வைரம், முத்து என்னும் இரண்டு அந்தணர் சாதியைச் சார்ந்தவை. பவளம், மாணிக்கம் என்னும் இரண் டும் அரச சாதி, புட்பராகம், வைடு ரியம், கோமேதகம் என்ற மூன்றும் வணிகர் சாதி. நீலம், மரகதம் என் னும இரண்டும் வேளாளர் சாதியாம்.

**நவமணிகளின் குணங்கள் :**

மக்கள முக்குணங்களை உடையவர் கள் என்பது போல நவமணிகளும் முக்குணங்களை ஒத்தன. பவளம், மாணிக்கம், கோமேதகம், புட்ப ராகம், வைடூரியம், வைரம் இந்த ஆறும் இராஜ குணமாகும். நீலம் தாமத குணத்தை உடையதும், முத்தும், மரகதமும் சாத்வீக குணத்தை உடையதாகும.

**நவமணிகளில் நவக்கிரகங்கள் :**

ஒன்பது மணிகளும் ஒன்பது கிரகங் களுக்குரியவை என்று சோதிட சாஸ் திரம் கூறுகிறது. நவமணிகளை வழி பட்டால் நவக்கிரக வழிபாட்டினால் வரும் பயனைப் பெறலாம். நவமணி களை வழிபட விரும்புவோர் தாமரை, சிறுசண்பகம், செவ்வல்லி, காந்தள், மல்லிகை, நூறிதழ்த் தாமரை. கரு விளம்பூ, கருங்குவளை,வெண்தாமரை ஆகிய ஒன்பது மலர்களை முடியில் சூடிக்கொண்டு வழிபடுதற்குரிய இடத்தை வரையறுத்துக் கொள்ள வேண்டும். பின்பு அந்த இடத்தை மெழுகித் தூய்மை செய்து ஆசனம் ஒன்று அமைத்து வெண்மையான ஆடை ஒன்றைவிரித்து, அந்த ஆடை மீது மாணிக்க மணியை நடுவில் வைத்து முத்து முதலிய பிற மணி களைக் கிழக்குத் திசை முதலாக எட் டுத் திசைகளிலும் முறையே வல மாகச் சூரியமண்டலம் போலச் சூழ அமைக்க வேண்டும். பிறகு மணி களுக்குரிய கிரகங்களை அவற்றில் ஆவாகனம் செய்து, மேற்சொன்ன ஒன்பது மலர்களைக் கொண்டு நவக் கிரக பூசைக்குரிய விதிப்படி அருச் சித்து வழிபடவேண்டும் என்று திரு விளையாடற்புராணம் கூறுகின்றது.

**நவமணிகளால் நவக்கிரகங்களுக்கு மகிழ்ச்சி :**

இந்திர கோபப்பூச்சி போன்ற சிவந்த மாணிக்கம் சூரியனுக்கு மகிழ்ச்சி தரும் செம்மை,பொன்மை வெண்மை, கருமை ஆகிய நிறங்களை உடைய முத்துக்கள் சந்திரனுக்கு மகிழ்ச்சியும், பொன்னிறத்தோடும் செந்நிறத்தோடும் கூடிய பவளம் செவ்வாய்க்கு மகிழ்ச்சியும், மயில் காடை பறவைகளின் இறகு போன்ற பச்சைநிற மரகதம் புதனுக்கு மகிழ்ச் சியும், பொன்னிற ஒளியுடைய புட்ப ராகம் குருவுக்கு மகிழ்ச்சியும், நட் சத்திரம் போன்ற வெண்மை ஒளி யுள்ள வைரம் சுக்கிரனுக்கு மகிழ்ச்சி யும், சூல் கொண்ட மேகம் போன்ற கரிய நீலம் சனிக்கு மகிழ்ச்சியும், பொன்னிறமும் செந்நிறமும் கலந்த கோமேதகம் இராகுக்கு மகிழ்ச்சியும், பூனைக்கண் போன்ற நிறமும், அசை யும் நூலைப்போன்ற ஒளியும் உடைய உடைய வைடூரியம் கேதுவுக்கு மகிழ்ச்சியும் உண்டாக்கும்.

திரு.எம்.நாராயணசுவாமி, எம்.ஏ.பி.இடி.
திருஇன்னம்பூர்.



திருக்கடையூர் அபிராமி அம்மன் சன்னதி,
திரு. வி. முத்துராமன், கோவை.

## நவமணிகளை அமைத்து பூஜிக்கும் முறை

| | | |
|---|---|---|
| (வடமேற்கு) நீலம் சனி | (வடக்கு) கோமேதகம் இராகு | (வடகிழக்கு) வைடூரியம் கேது |
| (மேற்கு) வைரம் சுக்கிரன் | மாணிக்கம் சூரியன் | (கிழக்கு) முத்து சந்திரன் |
| (தென்மேற்கு) புட்பராகம குரு | (தெற்கு) மரகதம புதன் | (தென்கிழக்கு) பவளம் செவ்வாய் |

## நவமணிகளுக்கு உகந்த மலர்கள்

மாணிக்கத்திற்கு தாமரையும், முத்திற்குச் சிறுசண்பகமும், பவளத்திற்குச் செவ்வல்லியும், மரகதத்திற்குக் காந்தளும், புட்பராகத்திற்கு மல்லிகையும், வைரத்திற்கு நூறிதழ்த் தாமரையும், நீலத்திறகுக் கருவிளம்பூவும், கோமேதகத்திற்குச கருங்குவளையும், வைடூரியததிற்கு வெண் தாமரையும் உரிய மலாகளாகும்.

## மோதிரத்தில் நவமணிகள் :

பூஜையில் நவமணிகளை அமைக்கும் முறைவேறு, மோதிரத்தில் அமைக்க வேண்டிய முறை வேறு. மோதிரத்தில் பதிக்கும் போது நடுவில் சூரியனுக்கும், கிழககு சுக்கிரனுக்கும், தென் கிழக்கில் சந்திரனுக்கும், தெற்கில் செவ்வாய்க்கும், தென்மேற்கில் இராகுவுக்கும், மேற்கில் சனிக்கும், வடமேற்கில் குருவுக்கும், வடக்கில் கேதுவுக்கும், வடகிழக்கில் புதனுக்கும் உரிய இடங்களாகக் கூறப்பட்டிருக்கின்றன.

## நவமணிகளை மோதிரத்தில் பதிக்கும் முறை

| | | |
|---|---|---|
| (வடமேற்கு) புட்பராகம் குரு | (வடக்கு) வைடூரியம் கேது | (வடகிழக்கு) மரகதம் புதன் |
| (மேற்கு) நீலம சனி | மாணிக்கம் சூரியன் | (கிழக்கு) வைரம் சுக்கிரன் |
| (தெனமேற்கு) கோமேதகம இராகு | (தெற்கு) பவளம செவ்வாய் | (தெனகிழக்கு) முத்து சந்திரன் |

இவ்வாறு சூரியனது இரத்தினமான மாணிக்கததை நடுவில்வைத்து வைரம், முத்து, பவளம, கோமேதகம், நீலம், புட்பராகம், வைடூரியம், மரகதம் இவைகளை முறையே கிழக்குத் திக்கு முதல் வடகிழக்கு வரையில் வைத்து மோதிரத்தில் இழைக்க வேண்டும். இப்படி இழைக்கப்பட்ட நவமணி மோதிரத்தை அணிந்து கொண்டால் கிரகங்களின் தீமைகளினின்றும் நீங்கி நலமுறலாம்.

ஒவ்வொரு மணியாலும் தனித்தனியே லிங்கம் அமைத்து வழிபடுவதும் உணடு. அப்படி வழிபடுவதால் உண்டாகிறபயனை ஆகமங்கள் சொல்லுகின்றன. இன்றும் சில தலங்களில் மரகத லிங்கம், ஸ்படிக லிங்கம் ஆகியவை இருக்கின்றன. கட்டை விரல் அளவிலிருந்து பன்னிரண்டு அங்குலம் வரை லிஙகங்கள் அமைக்க வேண்டும். இவைகளை வைத்துப் பூஜிப்பதால் தனித்தனியே நல்ல பயன உண்டாகும.

1. மரகதலிங்கம - புஷ்டி
2. பதுமராகலிங்கம் - பொருள்
3. வைடூரியலிங்கம - நீண்ட ஆயுள்
4. பளிங்கு லிங்கம் - மக்கட் பேறு
5. பவளலிங்கம - இராசவசியம்
6. வைரலிங்கம் - வசிய சக்தி
7. மாணிக்கலிங்கம் - சர்வ சிததி
8. நீல லிங்கம் - மோட்சம்
9. புட்பராகலிங்கம் - பகைமை ஒழிதல்

இத்தகைய அதிவிசேஷமான நவரத்தினங்களின் சிறப்பை எடுத்து சொல்ல காலம் போதாது. இவைகள் நம் வாழ்க்கைக்கும் ஆஸ்திக வழிக்கும் ஏதுவாக இருக்கின்றன. ஆலயங்களில் மூலஸ்தானத்தில் சிலையினை பிரதிஷ்டை செய்யும போது கூட நவரததினத்தை அடியில் வைதது வழிபடுவதும் சிறப்புடையதாகும். இத்தகைய சிறப்புடைய நவமணிகளின் குணத்தையும் நன்மையையும் அறிய மேலும் சிநதிப்போமாக.



வ்ருக்ஷபேது விஸாகாயாம்

குருகாபுரி காரிஜம் |

பாண்ட்யதேஸே கலே ராதௌ

ஸடாரிம் ஸைந்யபம பஜே'' ||

தாமிரபரணியென்னும் பொருநை ஆற்றின் கரையில் ஸ்ரீநகரி என்று பர் பெற்ற திருக்குருகூரில் திருழுதி வளநாடார் என்றொருவர் எம்பருமானிடத்தில் விசேஷ ப்ரதுத்தி பண்ணிக் கொண்டு வாழ்ந்து ந்தார். இவர் குமாரர் அறந் ாங்கியார், இவர் குமாரர் சக்ர ாணியார், இவர் குமாரர் அச்யுதர், )வர் குமாரர் செந்தாமரைக் கண ார்; இவர் குமாரர் செங்கண்ணர். )வர் குமாரர் போர்க்காரியார். )வர் குமாரர் காரியார். இவரின் )ருக்குமாரரே மாறன் என்னும் நம் ாழ்வார். மாறனின் திருத்தாயாரின் )ருநாமம் உடைய நங்கையார்.

வல்செய்துமுலையுண்ணாமல் மௌனத்தோடே எழுந்தருளியிருக்கச் செய்தே, வாட்டமின்றிக்கே டி பூர்ணராய் இருக்கிற இவ்வாச்சரியத்தை மாதா பிதாக்கள் கண்டு எம்பெருமான் மேல் பாரத்தை சுமத்தி இவ்வாழ்வார் திருவவதரித்தருளின 12ம் நாள் திருச்சங்கணித்துறையை உடைய பொருநல் ஆற்றின் தென் கரையில் பொலிந்து நின்ற பிரான் திருமுன்பே இவ்வாழ்வாரை எடுத்துக் கொண்டு போய், அவரை ஸேவிக்கப் பண்ணி, இவர்க்கு மாறன் என்று திருநாமம் சாத்தி, திருப்புளியாழ்வாரடியிலே தொட்டிலில் வளர்த்தி இவரைப் புத்திரன் என்று எண்ணாமல் விசேஷ ப்ரதிபத்தி பண்ணி ஸேவித்துக் கொண்டிருக்க, இவ்வாழ்வாரா தாம் திருப்புளியாழ்வார் அடியிலே பதினாறு திருநக்ஷத்திரமளவாக திருக்கண்களை விழியாமல் மௌனி

டெழுந்தருளி புண்ய க்ஷேத்ரங்களை தோறும் சோதித்துக் கொண்டுவந்து, திருவரங்க பெருநகரில் சோதிக்க, அதற்கும அப்பாலே தென் திசையிலேயாயிருக்க, பின்னையும் முன் போல் சீக்கிரமாக எழுந்தருளி, திருக்குருகூரிற்சென்று, அப்பால் பார்த்துக் காணாமையால் 'இது இங்கேயாயிருக்கும்' என்று சோதித்து வந்து, உறங்காப் புளியான திருப்புளியாழ்வாரடியில், பதினாறுவயஸ்ஸு உடையாராய், கண்களை விழித்துப்பாராமல் பத்மாஸநத்தில் ஜ்ஞாந முத்திரையோடே எழுந்தருளியிருக்கும் பரமாசார்யரான பராங்குசரை பார்த்து, 'இவர்க்கு சைதந்யமுண்டோ' என்று அறிகைக்காக ஒரு குண்டு கல்லை அவர் முன்னே, திடீர்! என்று எடுத்துப் போட, இவரும் அவ்வோசைக கேட்டு, திடுக்கென்று திருக்கண்களை மலரவிழித்துப்

# நம்மாழ்வார் வைபவம்

நம்மாழ்வார், திருக்குருகையில் ;லி பிறந்து 43வது நாள ப்ரமாதி பருடம் வைகாசி மாதம் 12 தேதி )பௌர்ணமி வெள்ளிக்கிழமை கூடிய பிசாக நக்ஷத்திரம் கற்கடக லக்னத்தில் நித்ய விபூதியில் நித்ய ஸூரிகளில் ஒருவரான ஸேனை முதலியார் அம்சராய் காரியாருக்கும் உடைய நங்கையார்க்கும் குமாரராகத் திருவவதரித்தருளினர் ஸந்தான பரம்பரையாக எம்பெருமானுக்கு அடிமை செய்யும் குலத்திற் பிறந்தவரே நம்மாழ்வார். இவர் சடவாயுவை நிராகரித்தமையால் இவர்க்கு சடகோபன் என்றும், பொலிந்து நின்ற பிரானால் ப்ரஸாதிக்கப்பட்ட மகிழம் பூமாலையைச் சாத்திக் கொண்டமையால் வகுளாபரணர் என்றும் திருநாமங்கள் அமைந்தன.

நம்மாழ்வார் திருவவதரித்தது தொடங்கி, கண்களை விழித்து முறுயாய் பத்மாஸநத்தில் ஜ்ஞான முத்திரையோடே எழுந்தருளியிருந்தார்.

இப்படி இருக்கையில், மதுரைகவியாழ்வார் திவ்ய தேசங்களை சேவிக்க எழுநதருளா நிற்க, திருவயோத்யைக்கு எழுந்தருளின வளவில், ஒரு நாள் ராததிரி தென் திசையில் ஒரு அப்ராக்ருத திவ்ய தேஜஸ்ஸைக் கணடு, இது என்? என்று திகைத்து நின்று, "ஏதேனும் க்ராமங்கள் வேகிறதோ? காட்டுத்தீயோ? என்று தம்மில் விசாரித்து அன்று கணவளர்ததருளினர். பின்னையும் இரண்டு மூன்று நாள் இப்படியே கண்டு, 'இது அப்ராக்ருத தேஜஸ்ஸாவிருக்கிறது, இதற்குக் காரணத்தை நாம பரீக்ஷிப்போம்' என்று பகலெல்லாம் கண் வளர்ந்து, ராத்ரி அந்த தேஜஸ்ஸே குறியாக அதிக வேகத்துடன் மீண்

பார்க்க, மதுரகவிகளும், "இவருக்கு வாக்குண்டோ? இல்லையோ?" என்று அறிகைக்காக, அவரைக் குறித்து, "செததத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்றெங்கே கிடக்கும்" என்று கேட்க, 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்' என்று ஆழ்வார் அருளிச் செய்ய, அதனை மதுரகவிகள். கேட்டருளி, 'இவர் ஸர்வஜ்ஞர்! இம்மஹாநுபாவரை நாம் அநுவர்த்

---

திரு. வி. ரங்காச்சாரி-சீர்காழி.

---

தித்து உஜ்ஜீவிக்க வேண்டும்' என்று நினைத்து ஆழ்வார் திருவடிகளில் ஆஸ்ரயித்து க்ருதார்த்தராய், ஆழ்வாரை ஸதானுபவம் பண்ணிக் கொண்டு எழுந்தருளியிருந்தார்.

அவ்வளவில, ஸ்ரீ வைகுண்டத்தில் எழுந்தளியிருக்கும ஸ்ரீமந் நாராயணன் 'ஆழ்வாருக்கு எதிர் விழி

கொடுக்க வேணும்' என்று திருவுள்ளமாய், பிராட்டியுந்தானுமாய்ப் பெரிய திருவடியின மேல் வந்து தோன்றி, தன்னுடைய ஸ்வரூப ரூப குண விபூதி சேஷ்டிதஙகளையெல்லாம் கணடு அனுபவிக்கலாம்படி ஆழ்வாருக்கு மயாவற மதி நலமருள, ஆழ்வாரும் எமபெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தையும் திவ்ய மங்கள விக்ரஹத்தையும் திவ்ய குணஙகளையும் அநுபவித்து, அவ்வனுபவத்தாலுணடான ப்ரீதி உளளடங்காமையால் இயறபாவாக, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்கிற மூன்று பரபந்தங்களால் ரிக், யஜுஸ்ஸு, அதர்வணம் என்கிற மூன்று வேதங்களின ஸாரார்த்தத்தையும், சரம ப்ரபநத மான திருவாய்மொழியால் ஸாம வேத ஸாரார்த்தத்தையும் அருளிச் செய்தார்.

எல்லா திவ்ய தேசங்களிலுமுள்ள எம்பெருமான்களும் திருப்புளியாழ்வாரடியிலே எழுந்தருளி இவ்வாழ்வாருக்கு ஸேவை ஸாதித்து தாங்களும் ஸத்தை பெற்றிருக்கவும். நித்ய ஸூரிகளும் ஸ்வேதத்வீபவாஸிகளும் இவ்வாழ்வாரைக் காணகைககாக வந்து நிற்கவும், அவர்களை ஆழவார் ஸேவித்து 'பொலிக பொலிக' என்று மங்களாசாசனநம் பண்ணி, இப்படி ஸ்ரீ வைஷ்ணவர்களின் வைபவத்தை அறிந்து அனுபவித்த தமக்கு உபய விபூதியிலும ஒப்பில்லாத பெருமையை உடையராய், பால்யந் தொடங்கி எம்பெருமானுடைய குணங்களையே தாரகமாக வுடையரான இவ்வாழவார், அர்த்த பஞ்சகத்தையும், ஸரணாகதி மந்த்ரார்த்தத்தையும், சாமப்ரபநதமான திருவாய்மொழியில் நன்ருக தெளியும்படியருளிச் செய்து, முப்பத்தைந்து திருநஷ்த்ரத்துக்கு மேல் அவாவற்று வீடு பெற்றருளினுர்.

ஆழவாருக்கு ப்ரதம ஸிஷ்யரான மதுரகவிகள தம் ஆசாரியர் வைபவத்தை கண்ணிநுண சிறுத்தாம்பு எனகிற திவ்ய ப்ரபந்தத்தாலே அருளிச் செய்து, அர்ச்சாதவதார ரூபமான ஆழ்வார் விக்ரஹத்தையும் ஏறியருளப் பணணி, அவர்க்கு நித்ய, பக்ஷ, மாஸ, அயந, ஸம்வத்ஸர, உத்ஸவங்களையெல்லாம் தாழ்வற நடத்திக கொணடு மஹோத்ஸவம் கண்டருளப் பணணி, 'வேதம தமிழ் செய்த பெருமாள் வந்தார! திருவாய் மொழி பெருமாள் வந்தார்! திருநகரிப் பெருமாள் வந்தார்! திருவழுதி வளநாடர் வந்தார்! திருக்குருகூர்நகர் நம்பி வந்தார்! காரி மாறன் வந்தார; சடகோபன் வந்தார்! பராங்குசர் வந்தார்!' எனறு பல சிந்நம் பரிமாற, அவ்வளவில் ஏகம்ப நாடன சிஷ்யர்கள் வந்து 'எஙகள கமபனேடு தர்க்கித்துச் சங்கப் பலகை யேறினுலொழிய 'வேதம் தமிழ் செய்த பெருமாள்'! என்ற விருது பிடிக்கவொட்டோம'' என்று தடுக்க, மதுரகவிகளும் 'அது நயாயந்தான், எங்கள் ஆழ்வார் எங்கும் எழுந்தருளார். அவருடைய திவ்ய ஸூக்திக்கு சங்கப் பலகை இடம் கொடுத்ததாகில் அவருக்கு இடம் கொடுத்ததாம்' என்று சொல்லி, ஒரு சிறு முறியிலே 'கணணன் கழலிணை' எனறு எழுதி இச்சிறு முறியைச் சங்கப் பலகையின் மேலே வைகக, அக்காலத்தில் தென் மதுரையில் கம்பநாடனேடு சேரமுந்நூறுதமிழ்ப் புலவர்கள,சங்கப் பலகை யேறிருக்க; அப்பலகை அவர்கள் எல்லோரையும் எடுத்துக் கவிழ்த்துப் போட்டு, ஆழ்வார் திவய ஸூக்திச் சிறிமுறியொன்றையுமே தரிதது கொணடு நிற்க, இதைக கணடு ஏகம்ப நாடனும் ஆச்சரியப்பட்டு ஈயாடுவதோ கருடற்கெதிரே? இரவிக்கெதிர் மின்மினியாடுவதோ? நாயோடுவதோ வுறுமிப் புலிமுன்? நரி, கேசரி முன்னடையாடுவதோ? பேயாடுவதோவழ வூர்வசிமுன? பெருமானடி சேர வகுளாபரணன் ஓராயிரமாமறையின் தமிழின்ஞெரு சொற் பொறுமோவுலகிற் கவியே!' என்று கவி சொல்லி ஆழ்வாரிடத்தில் மன்னிப்புக் கேட்டுக் கொணடான்.

அகஸ்தியா ஒரு சமயம் நைமிசாரணய க்ஷேத்திரததிற்குச் செனறு 'ஸ்ரீதர! வாசுதேவா! ஸ்ரீஹரி! கிருஷ்ணு என்றே, தீதிலாதிருக்கும் நைமி சாரணய க்ஷேத்ரந்தன்னில மாதவம் புரிய வேண்டி' வந்த முனிவர்களைச் சந்திதது முகமன் கூறிக் கொணடிருந்தார். அப்போது அங்குக் கூடிய முனிவாகளெலலாம் ஒன்று சோந்து 'மகத்துவம் பூமியிற்குகீர் வாணமே முகதியல்லாம், அகததியன் தமிழிஞலே ஆவதுமுணடோ?' என்று இகழ்ச்சியாய்ப் பேசலுறருா கள். அககணமே தமிழ் முனிவர் அஙகு விட்டு மகாமேரு மலையை நணணி தவத்தைத் தொடங்கினுர். இவா தவத்தை மெச்சி திருமாலுந தோனற.

'' பனனக சயனுபோறறி! பஙகயக் கண்ணு போறறி!
உனனருள் அலலால் வேறே உல கினில உண்டோ ஐயா!
என்னுடையத் தமிழைத் தானே இகழ்ச்சியாய் முனிவரெலலாம
சொன்னதால் தமிழ்க்கு முத்தி சோதியே, தருவீா''

என்று பிரார்த்தித்துக் கொண்டாா.

இவவாறு பகதமுனி இறைஞ்ச பேரருளாளனுன பெருமான் நகைப்புடன் 'கலியுகத்தில் நாம் தானே நம்மாழ்வாராய் மகத்துவமாய் விளங்க மறைப் பொருள் தமிழ செய்வோமே' என்று மறைநதருளினுன்.

கிருதயுகததில் அத்ரியும் ஜமதகனியுமாகிற பிராமணர்களுககுப் பிளளையாய தத்தாத்ரேயனும, பரசுராமனுமாய திருமால அவதரித்தான. த்ரேதா யுகத்தில் க்ஷத்திரியனுன தசரதனுக்குப் புத்திரனுய் அவதரித தான். துவாபரயுகத்தில் யதுகுலத்தில் க்ஷத்திரியனும் வைசியனுமான வஸுதேவருக்கும், கோ ரக்ஷணத்

னாலே வைசியரான நந்தகோபருக் நம் பிள்ளையாய் ஆனான். ஆனால் கலியுகத்திலே நான்காவது வர்ணத்திலே ஆழ்வாராக அவதரித்து வேதம் தமிழ் செய்தான். எனவேதான் 'அத்ரி, ஜமதக்னி பங்க்திரதவஸு நந்த ஸூனு, வாணவனுடைய யுக, வர்ணக்கிரமாவதாரமோ' என்று ஆசாரிய ஹ்ருதய சூத்திரம் விளம்புகின்றது.

தமிழ் முனிக்குக் கொடுத்த வாக்குப்படியே பகவான் தெற்குத் திக்கில் ஓர் ஒளிமயமாய்த் தோன்றினான். அது தமிழுக்கும், தமிழருக்கும் தோன்றிய ஒளியாயது; வைணவர்க்கோர் வாழக்கைத் தத்துவமாயது. மக்கள் மகிழ்ச்சியில் திளைத்திருக்கும்போதே குருகையில் தோன்றிய ஒளி, சரயூ நதிக்கரையில் இருந்த ஓர் பெரியாரை ஈர்த்தது.

அவரும் திருக்குருகூருக்கு எழுந்தருளி ஞான சூர்யோதத்தைக் கண்டு உள்ளம் கிளர்ந்து மெய் சிலிர்த்து கண்களில் மகிழ்ச்சி வெள்ளம் பெருக, அடிமையானார்.

## தி. தி. தேவஸ்தான

## ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி கோயில், திருப்பதி.

### தினசரி நிகழ்ச்சி நிரல்

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | சுப்ரபாதம் |
| 5-30 | முதல் | 9-30 | வரை | ஸர்வ தரிசனம் |
| 9-30 | ,, | 10-30 | ,, | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 10-30 | ,, | 10-45 | ,, | முதல் மணி |
| 10-45 | ,, | 11-30 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-30 | ,, | 11-45 | ,, | இரண்டாவது மணி |
| 11-45 | ,, | 4-00 | (மாலை) | ஸர்வ தரிசனம் |
| 4-00 | முதல் | 4-30 | வரை | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 4-30 | ,, | 5-30 | ,, | ஸகஸ்ரநாம அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 5-30 | ,, | 5-45 | ,, | இரவு மணி |
| 5-45 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 6-15 | ,, | 6-45 | ,, | தீபாராதனை |
| 8-00 | முதல் | 8-15 | வரை | ஏகாந்த சேவை |

| ஆர்ஜித சேவைகள் | கட்டணம் | நேரம் |
|---|---|---|
| 1. அபிஷேகம் | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | காலை 9-30 முதல் 10-00 வரை |
| 2. ஸகஸ்ரநாமா அர்ச்சனை | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | மாலை 5-00 முதல் 6-00 வரை |

### பிரஸாத கட்டண விவரங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1) | புளியோதரை | — | ரூ. 50-00 |
| 2) | பொங்கல் | — | ரூ. 55-00 |
| 3) | தத்யோதனம் | — | ரூ. 40-00 |
| 4) | சர்க்கரைப் பொங்கல் | | ரூ. 65-00 |
| 5) | தோசை | — | ரூ. 35-00 |
| 6) | ஸீரா | — | ரூ. 155-00 |
| 7) | கேஸரிபாத் | — | ரூ. 85-00 |

"சேமம் குருகையோ, செய்ய திருப
பாற் கடலோ
நாமம் பராங்குசமோ, நாரணமோ-
தாமம்
துளவோ வகுளமோ தோளிரண்டோ
நான்கு
முளவோ பெருமா னுனக்கு"

என்று மக்கள் எல்லாம் கொண்டாடினர்.

இவ்வாறு "அருள் கொண்டாடும் அடியவர் இன்புற, அருளினன் அவ்விருமறையின் பொருள், அருள் கண்டீர் இவ்வுலகினின் மிக்கதே" என்று வியக்கத்தக்க முறையில் வேதங்களைப் பைந்தமிழ்ப் பாவின் மூலம் செந்தமிழ்க் கோமகன் பாடியருளினன்.

எனவேதான் இம்மை மறுமை இன்பங்களைக் கொடுக்கும் 'அருமறைகள் அந்தாதி செய்தான் அடியிணையே எப்பொழுதும் சிந்தியாய் நெஞ்சே தெளிந்து' என்று ஈச்வர முனிகள் அருளிச் செய்தார்.

பாரத பூமியில் எத்தனை எத்தனையோ மகான்கள் பிறந்தார்கள். இருந்தார்கள். உயர்ந்த உபதேசங்களையும் செய்திருக்கிறார்கள். அவர்கள் அனைவருள்ளும் ஸ்வாமி நம்மாழ்வார் பூர்ணரும் மகான்னதப் பெருமையும் உடையவர் ஆவார்.

இத்தகைய மாண்புமிக்க மறையோதும் மாறனை 'நால் வேதம் கண்ட புராண ரிஷி, மந்திர தரிசிகளைப் போலே இவரையும் ரிஷி முனி கவியென்னும்' என்று ஆசாரிய ஹ்ருதய சூத்திரம் போற்றுகின்றது. எனவேதான் ஆழ்வார் அருளிச் செயல்களை உபய வேதம் என்று ஸ்ரீ வைஷ்ணவர்கள் போற்றிக் காப்பாற்றி வருகின்றனர்.



# ★ ஆலய விசேஷங்கள் ★

தாவணகரே இராமர் கோவிலில் நவக்கிரகங்கள் தங்கள் தேவியருடன் இருக்கின்றனர். ஆதியனூர் கோவிலில் தனித்தனி சந்நிதி. வைதீஸ்வரன் கோவிலில் ஒரே நேர் வரிசையில். நவபாஷாணத்தில் கடல் நீரில். தஞ்சை பெரிய கோவிலில் லிங்க வடிவில். சுசீந்திரம் கோவிலில் உத்திரத்தில்; சென்னை தியாகராய நகரில அகஸ்தியர் கோவிலில் வட்ட வடிவில் எட்டுத் திக்குகளை நோக்கியுள்ளது. உடுப்பி கோவிலில் ஒன்பது துவாரங்களில்; பம்பாய் செம்பூர் சுப்பிரமணிய சுவாமி கோவிலில் ஆமை வடிவ பீடத்தில் நவக்கிரகங்களுக்குக் கீழ 12 ராசிகளின் வடிவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. தஞ்சை மாவட்டம் நாச்சியார் கோயிலில் ஸ்ரீராமநாத சுவாமி ஆலயத்தில் ஸ்ரீசனி பகவான் தேவியரோடும், சூரிய பகவான் தேவியரோடும் தசரத மகாராஜாவுக்குக் காட்சிக் கொடுக்கிறார்கள். இதற்குத் தனிச் சந்நிதி உள்ளது. தனி பூஜையும் நடைபெறுகிறது. நவ நாயகர்களுமே வந்து வழிபட்டுப் பேறு பெற்ற பெருந் தலம் ஒன்று தொண்டை நாட்டில் இருக்கிறது. அது திருவல்லம்என்னும் பாடல் பெற்ற சிவபதியே ஆகும. தஞ்சை மாவட்டத்தில் திருத்தெங்கூர் என்னும் ஆலயத்தில் சுவாமிககு வெள்ளி மலைநாதர் என்று பெயர். வெள்ளி மலை நாதராலயத்தின் திருச்சுற்றில் ஒன்பது சிவலிங்கங்களைக் காணலாம். கோள்கள் ஒன்பதும் வந்து சிவலிங்கம் அமைத்து வழிபட்ட தலமாதலால் ஒன்பது சிவலிங்கங்களும நவ நாயகர்களின் பெயரால் இலங்குகின்றன.

புவன சாரம், மும்மூர்த்திவாசம், விண்டுபுரம், கலிஜித், காஞ்சி, லயஜித், சகல சித்திபுரம், தபோமயம், பிரம்மபுரம், ஆதிபீடம், கன்னி காப்பு, சிவபுரம் ஆகிய திருநாமங்கள் கச்சியம் பதிக்கு உள்ளன. ஸ்ரீமந் நாராயணன் எழுந்தருளியிருக்கும் திவ்ய க்ஷேத்திரங்களில் எல்லாம் பகவானுடைய இடது கையில்தான் சங்கு காணப்படும். திருக்கோவிலூர் என்னும் தலத்தில் பகவான் உலகளந்த பெருமாளாகக் காட்சியளிதது கொண்டிருக்கிறார். அங்கு அவர் தன்னுடைய வலது கையில் சங்கை வைதது்க் கொண்டிருக்கிறார். மகாபலியை திரிவிக்ரமனாக வந்து ஜயித்து ஆட்கொண்டதைத் தெரிவிப்பதற்காகத் தனது இடது கையிலிருந்த சங்கை வலது கையில் வாங்கி அதிலிருந்த வெற்றி முழக்கத்தைக் கிளப்பிய நிலையில் பகவான் திருககோவிலூரில் (தெ. ஆற்காடு மாவட்டம்) காட்சியளித்துக் கொண்டிருககிறார்.

ஆரணியில் கமண்டல நாக நதியின் கரையில் உள்ளது புத்திர காமேஸ்வரர் ஆலயம். சுவாமியின் பெயர் புத்ர காமேஷ்வரர். தசரத மகாராஜா புத்திரருககாக வேண்டி யாகம செய்த இடம ஆகும். புத்திர சந்தானம் இல்லாதவர்கள் இங்கு வழிபாடு செய்து பலன் பெறலாம். திருவாஞ்சியம் என்ற தலத்தில் எம தாம ராஜனுக்குத் தனிச் சந்நிதி இருக்கிறது. இவரை வணங்கிய பின்னரே மற்ற மூர்த்திகளை வணங்க வேண்டும் என்பது இங்கு விதி. இறைவன் எழுந்தருள்வதற்கு எம தாம ராஜ வாகனம் ஒன்று உள்ளது.

திரு. ஏ. என். சுப்ரமணியன்
குடியாத்தம்.

திருப்பைஞ்லி என்னும் தேவாரத் தலததிலும் எமனுக்குத் தனிச் சந்நிதி உள்ளது. எமன் வாகனத்தில் இறைவன் எழுநதருளி உலா வருவது திருவாஞ்சியத்தில்தான். லேபாக்ஷி வீர பத்திர சுவாமி கோயிலிலுள்ள நந்திதான் உலகிலேயே பெரிய நந்தியாகும். இரண்டாவதுதான் தஞ்சை.

சீர்காழி தலத்திற்குரிய பதிகங்கள் மொத்தம் 71. அவற்றுள் திருஞான சம்பந்தர் மட்டும் 67 தேவாரப் பதிகங்களை அருளியிருக்கிறார். திருவீழி மிழலை என்ற சிவததலம் இரண்டாவது ஆகும். "காழி பாதி வீழி பாதி" என்ற பழமொழியே உண்டு. ஞான சம்பந்தர் சீர்காழிககும், திருவீழி மிழலைககும் அதிகமான பதிகங்களை அருளியிருக்கிறார். கண்ணில்லாத ஒருவருக்கு கண் கொடுத்த தெய்வமாய் திகழும் ஆலயம் ஒன்று குடியாததம் அருகில் மீனூர் மலையில் வீற்றிருக்கும் ஸ்ரீ வெங்கடேச பெருமாள் கோயில் ஆகும். தஞ்சை மாவட்டத்தில் குடந்தை அருகே திருநாகேஸ்வரம் என்னும் திருததலத்தில் நவநாயகர்களில் ஒருவரான ராகு தேவனின் தனிக் கோயிலாகச் சிறப்பு பெற்றது. பாம்பரசனை நாகராஜன் வழிபட்டதால இறைவனை நாகநாதர் என்னும திருப்பெயரில் அழைக்கின்றனர். இறைவனின் இருமருங்கிலும் நாகம்மைகள் இருவர் வீற்றிருக்கின்றனர். அபிஷேகம் செய்யும் பால் நாகநாதரின திருமேனியில் பட்டு நீல நிறமாக மாறுவது இததலத்தில் ஒன்றே.

கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள சுசீந்திரம் கோயிலில் அன்

(40-ம் பக்கம் பார்க்க)

# கார்த்திகை தீப மகிமை

முன்னுரை :

திருக்கார்த்திகை, இந்துக்களாகிய நாம் கொண்டாடும் பண்டிகைகளில் முக்கியமான தொன்று. இந் நன்னாளில கார்த்திகை மாதத்து கார்த்திகை விண்மீனும் முழு மதியும் ஒன்று சேர இருக்க சிவ பெருமான் தேஜோரூபமாக, அக்னிப் பிழம்பாய் சுவாலைகள் எழும்ப காட்சி அளித்தான் என்பது ஒரு வரலாறு. இது காரணமாக திருவண்ணாமலையில் தீபோத்ஸவம் கொண்டாடுகின்றனர். திருமால் திருக்கோயில்களில் தீபமேற்றுதலும், தீப ஆரத்தி எடுத்தலும், தீப வரிசைகளால் திருக்கோயிலை அலங்கரித்தலும் அபரிமிதமான பலனை அளிக்கவல்லன. இந்த தீபாராதனம் எம்பெருமான் உகப்பிறகு மிகவும் சிறந்ததென்று என சாத்திரங்களும் ஆகமங்களும் கூறுகின்றன.

விஷ்ணு தர்மம் என்ற புராணப் பகுதி இந்த தீபாராதனத்தைப் பற்றி விரிவாகப் பேசுகிறது. தீபாராதனத்தால் இறைவன் உளமுவந்து உய்வித்த வரலாறு ஒன்றினையும் கூறுகிறது

லலிதை என்பவள் விதர்ப்பராஜனின் அருமை மகள். காசிராஜனின் பட்ட மகிஷி. இவளுக்கு மூந்நூறு ஸபத்நிகள் (சக்களத்திகள்) இருந்தனர். ஆயினும் இவளே பட்ட மகிஷியாக விளங்கினாள். பேரழகியாகவும், இனிய சொல்லுடையவளாகவும், அனைவராலும் விரும்பப்படுகிறவளாகவும், அனைவருடைய மரியாதைக்கும் பேரன்பிற்கும் பாத்திரமாகவும் விளங்கினாள். இவளுடைய உடல் நலமும், உள்ள நலமும் காசி ராஜனை இவள் பால் ஈர்க்கச் செய்தன. அவன் இவளிடம் அன்பு கொண்டு வசப்பட்டிருந்தான். தன்னுடைய ஸபத்நிகளும் தன்னை வெறுக்காது தன்னிடம் அன்பு பூண்டு மரியாதையுடன் இருக்குமபடியான குண நல சிறப்பும் இவளிடம் இருந்தது. இவள் பகவத் ஸந்நதியிலே இரவு பகல் என்ற வித்யாசமில்லாமல் அநேக திருவிளக்கேற்றி, அதிலே பூரண ஈடுபாடுடையவளாய் இருந்து வந்தனள். இதைக் கண்ட மற்ற மகிஷிகள் இவளிடம் தேவி "உனக்கு அழகு முதலிய குண நலன்களின ஏற்றத்திற்கும் இந்த தீபாரோபண கைங்கர்ய ஈடுபாட்டிற்கும் காரணம் என்ன?" என்று கேட்க அவள் விடை பகரலானாள். "எனக்கு இவ்வளவு மங்களங்களை அளித்த புண்ணியம் யாது என்று கூறுகின்றேன். எனக்கு பூர்வ ஜன்ம நினைவு இருக்கிறது. அதுவும் புண்ணிய பலனே.

ஸௌவீர ராஜஸ்ய புரா
மைத்ரேயோऽபூத புரோஹித: ।
தேந சாத தநம விஷ்ணோ:
காரிதம தேவிகாதடே ॥
அஹந்யஹநி சிச்ருஷாம
புஷபதூ பாமபுலேபநை: ।
தீபதாநந்தி பிச்சைவ
சக்ரே தத்ர வஸந் த்விஜ: ॥

மைத்ரேயன் என்ற அந்தணன் ஸௌவீர ராஜனுடைய ராஜ புரோகிதன். சமதமாதி குணங்கள் பொருந்தியவன். தேவி ஆற்றங்கரையில் திருமாலுக்கு அழகிய கோயில் ஒன்றைப் பாங்குடன் பார்த்துப் பார்த்து அழகுறக் கட்டினான். திருமாலுக்கு எல்லா வித கைங்கர்யங்களையும் திட்டமிட்டு அழகு பட நடத்தி வந்தான். திருமால கைங்கர்யத்திலே அல்லும் பகலும் ஊன்றி அங்கேயே வசிக்கலானான்.

ஒரு திருக்கார்த்திகை தினம்; கார்த்திகை மாதம் முழுமதி நன்னாள். பெருமாள் ஸந்நதியில் தீப வரிசைகளை ஏற்றி மகிழ்ந்தான். நள்ளிரவு அவன் ஏற்றி அநுதினமும் எரிக்கும் தூண்டா விளக்கு அணையும் தருவாயை அடைந்தது. அது அணையப்போகும் அளவிலே, அக்கோயிலிலே ஒரு பெண் எலி அத்திருவிளக்குத் திரியை கவ்விச் செல்ல வேண்டும் என்று நினைந்து, அருகணைந்து கவ்விய அளவிலே ஓர் பூனை வந்து அதன் கழுத்தைக் கவ்விட, ஏங்கிச் சாகிற அவ்வெலியின் உடல் நடுக்கத்தால் அதன் முகம் அத்திரியை வாங்கிட, அவிகிற விளக்கு தூண்டப்பட்டுப் பளபளத்து எரிந்தது. எம்பெருமானின் எண்ணத்தாலே இச்செயல் அவனுக்கு தீபாராதனமாக ஏற்பட்டது இதை அவ்வெலி அறிந்து செய்யவல்லை ஆயினும் எம்பெருமான தனக்குத் தீபமேற்றிய புண்ணிய கருமத்தை செய்தது என ஏற்றுக் கொண்டான். இந்த அஜ்ஞாத ஸுக்ருதமடியாக அந்த எலி அடுத்த பிறவியில ஸௌவீர ராஜனுடைய திருமகளாய் எல்லா மங்களங்களுடன் அழகு பொலிய, அழகு தேவதை வாழ்த்த வந்து தோன்றினாள். இந்த எலி யாரென்று நினைக்கிறீர்கள்? நானே தான் அவ்வெலியாக பெருமாளின் ஸந்நதியில் பூனையினால் கவ்வி உண்ணப்பட்டேன். திருவிளக்கு தூண்டி ஸமர்ப்பித்த புண்ணியமாக இறைவனால் ஏற்றுக் கொள்ளப் பட்ட புண்ணியமே நான் அங்குப் பிறந்தது. இந்த மகானுபாவனை காசிராஜ புத்ரனுக்கு வாழ்க்கைப்

கொட்டையூர்
தம்பு. ப. கிருஷ்ணசாமி.

## தி. தி. தேவஸ்தானத்தாரின
# ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயில், திருச்சானூர்
## தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | —சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | —ஸகஸ்ரநாம ஆர்ச்சனை ரூ.6-50 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | | | | —நித்ய அர்ச்சனை (வருடத்திற்கு ரூ. 150/- செலுத்தும் கிருஹஸ்தர்கள் பங்கேற்கலாம்) |
| 6-15 | ,, | 6-45 | ,, | —சுத்தி—முதல்மணி |
| 6-45 | ,, | 1-00 | மதியம் | —ஸர்வதரிசனம் |
| 1-00 | ,, | 1-30 | ,, | —சுத்தி, 2-வது மணி |
| 1-30 | ,, | 7-00 | இரவு | —ஸர்வதரிசனம் |
| 7-00 | ,, | 7-30 | ,, | —சுத்தி, இரவு மணி |
| 7-30 | ,, | 8-30 | ,, | —ஸாவதரிசனம் |
| 8-30 | ,, | 9-00 | ,, | —ஏகாந்தசேவை |

## வெள்ளிக்கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 4-00 | ,, | 4-30 | ,, | —ஸர்வ தரிசனம் |
| 4-30 | ,, | 5-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-50 (நான்கு நபர்கள் அனுமதிக்கப்படுவர்) |
| 5-00 | ,, | 5-15 | ,, | —நித்ய அர்ச்சனை |
| 5-15 | ,, | 5-45 | ,, | —சுத்தி, முதல் மணி |
| 5-45 | ,, | 7-00 | ,, | —ஸர்வதரிசனம் |
| 7-00 | ,, | 7-30 | ,, | —சாலிம்பு |
| 7-30 | ,, | 9-00 | ,, | —தாயாருக்கு அபிஷேகம் (ரூ. 100/- செலுததி இரு நபர்கள் பங்கேற்கலாம்) |
| 9-00 | ,, | 10-00 | ,, | —அலங்காரம், 2வது மணி |
| 10-00 | ,, | 8-00 | இரவு | —ஸர்வ தரிசனம் |
| 7-00 | ,, | 8-00 | ,, | —கண்ணாடி மண்டபத்தில் ஊஞ்சல் சேவை. (ரூ. 150/-செலுத்தி பங்கேற்கும் இரு நபர்களுக்கு சுமார் 5 கிராம் எடையுள்ள வெள்ளிப் பதக்கம் வழங்கப்படும்) |
| 8-00 | ,, | 8-30 | ,, | —இரவு மணி |
| 8-30 | ,, | 9-00 | ,, | —ஏகாந்தசேவை |

## ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

I தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

II ஆர்ஜிதம்

| | | |
|---|---|---|
| (அ) பொங்கல் | ¼ அளவு | ரூ. 55/- |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 50/- |
| (இ) ததயோதனம் | ,, | ரூ. 40/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 85/- |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 65/- |
| (ஊ) தோசைப்படி | ,, | ரூ. 35/- |
| (எ) ஸாகரபாத | ,, | ரூ. 90/- |
| (ஏ) ஸீரா | ,, | ரூ.155/- |

III சேவைகள்

| | |
|---|---|
| (அ) நித்ய அர்ச்சனை (ஆண்டொன்றுக்கு) | ரூ. 150/- |
| (ஆ) ஸகஸ்ரநாமஅர்ச்சனை | ரூ. 6-50 |
| (இ) அர்ச்சனை | ரூ. 1-00 |
| (ஈ) ஹாரத்தி | ரூ. 0-50 |
| (உ) பூராபிஷேகம (வெள்ளிக் கிழமையில் மட்டும்) | ரூ 100-00 |
| (ஊ) ஊஞ்சல் சேவை (வெளளிக்கிழமை மாலையில் மட்டும்) | ரூ.150-00 |
| (எ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஏ) யானை வாகனம் | ரூ. 32-00 |

* திருப்பதியிலிருந்து 3 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

பட்டது. இப்படிப்பட்ட உங்களையும் சக மகிஷிகளாகப் பெற்றதும் முன ஜன்ம நினைவும் அடையப் பெற்றேன்'' என்றாள்.

ஏஷ பரபாவோ தீபஸ்ய
கார்த்திகே மாஸி சோபநா. |
தத்தஸய விஷ்ணவாயதநே
யஸ்யேயம் வயுஷ்டிருத்தமா ‖
அஸங்கல்பித மப்யஸய
பரேரணம யத் க்ருதம் மயா |
விஷ்ணவாயதநதிபஸய
தஸயைதத் புஜயதே பலம ‖
ததோ ஜாதி ஸ்மருதிர் ஜநம
மாநுஷ்யம சோபநம வபு: |
வஸ்ய: பதிர மே ஸர்வாஸாம்
கிம்புநர் தீபதாயிநாம் ‖

'நான் அறியாமல் செய்த இந்த யதிருச்சையாக திருவிளக்குத் தூணடிய இச்செயலை அஜ்ஞாத ஸுக்ருதமாக எமபெருமான் கொணடானே. புத்தி பூர்வமாக நாடோறும் நநதா விளககாய, சரவிளககுகளாய், தீப வரிசைகளினாலே எம்பெருமானுககு ஆராதனம செய்வோமானால் எத தகைய நன்மை பயக்கும்; எத்துணை புண்ணியம் ஏற்படும்; எம்பெருமானுக்கு எவ்வளவு மகிழ்ச்சியை அளிககும். இது தன்னிலும் சீரிய புணணிய கருமம் வேறுளதோ. நீஙகளும் இக்கைங்கர்யத்தில் அநவயிதது தீபமேற்றுங்கள். எம்பெருமானுடைய கருணைக்கும், முக உலலாசத்திற்கும் பாத்திர பூதராகுஙகள்' என்று உடமபெல்லாம உரோம கூபங்களாய் சிலிர்க்க கணண நீா பெருக, குரல தழுதழுக்க லலிதை தன் சககளததிமார்களுக்குக் கூறினாள். காாத்திகை மாதத்து திருக் கார்த்திகை தீப உத்ஸவம் திருமாலுக்கு எத்துனை இன்பம அளிககவல்லது என்பதைக கணடோம. எததுணை மஙகள பலனகளை அது அருளுகின்றது என்பதையும கணடோம. ஆதலின் மாதக் காாத்திகை தினமீன்களிலும, முழுமதி நன்னாட்களிலும, வெள்ளிக்கிழமை தோறும, வருட திருக்கார்த்திகை திருநனனாளிலும் தீபமேற்றி வழிபட்டு திருமகள் கேளவனான திருமால் அருளைப பெற்று உய்வோமாக. திருமகள் நம் மகத்து அகலாது உறைவாள். செலவம் கொழிககும் (இவ்வரலாறு ஸ்ரீ விஷ்ணு தாமததில விஸ்தாரமாகச் சொல்லப்பட்டுள்ளது.) ★

# வைணவ வினா - விடை

## வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

**ஸ்கந்தபுராணம் விவரணம் என்ன?**

இதுவே புராணங்களில் மிகவும் பெரியது. இதில் மாகேச்வர கண்டம் தொடங்கி பிரபாஸ கண்டம் வரை 7 கண்டங்கள் உள்ளன. முழுக்கமுழுக்க முருகன் பெருமை. இதில ஒவ்வொரு எழுத்திலும் சிவபெருமான்கோயில் கொண்டிருக்கிறாராம். கேதார க்ஷேத்திரத்தின் பெருமை — சிவபெருமான் பெருமை தக்ஷயாகம் — குமாரோத்பத்தி - நதிகள் - சமுத்திரங்கள் — இவைகளின் சிறப்பு. தாரகன்வதம் — மகா காலனின் தோற்றம் - வாஸுதேவ மகாத்ம்யம - பாணடவர்களின் கதை - அருணாசலம், சேஷாசலம் இவைகளின சிறப்பு-வராகாவதார கதை-லக்ஷ்மீ (திருச்சானூர் திருப்பதி அலர்மேல் மங்கை நாச்சியாரின் அவதாரம்-ஸ்ரீநிவாஸன் (திருப்பதி திருவேங்கடமுடையான்) கதை-புருஷோத்தமன் பெருமை - பரத்வாஜரின் கதை - ஜைமினி, இந்திரத்யுமனன், வித்யாபதி - நீலகண்டன், இவர்களின கதைகள் — நரசிம்மனுடைய அவதாரம் — அச்வமேதயாகமகிமை. இவ்வாறு பற்பல விஷயங்கள் உள்ளன. இவைகளில சிவாரத்திரியின பெருமை - சப்தரிஷி மண்டலம், துருவமண்டலம் - பெணகளின் லக்ஷணம - பிசாசு பேய் இவைகளை விரட்டும் மந்திரங்கள் - கருடன் கதை என்பவை குறிப்பிடத்தக்கவை.

**வாமன புராணம் பெருமை எனன?**

இதிலும் இரணடு பகுதிகள் உண்டு. திரிவிக்கிரமன (வாமனாவதாரக்கதை) சரிதம் முக்கிய இடம் பெறும. கேட்பவர்களுக்கு எணணமெல்லாம் சட்டெனப்பலிக்கும் அருள தரும் புராணம். புவன கோசவருணனை - குமாரசரிதம் - ஜாபாலி சரிதம் - மருந்துக்கள பிறவி வருணனை - துருவ சரித்திரம் - துநதுமாரசரிதம் - ப்ரஹ்லாத தீாததயாததிரை - ப்ரஹ்லாத பலி ஸம்வாதம்-மோஹேச்வர ஸம்ஹிதை- ஸௌஸம்ஹிதை - கணேச்வர ஸம்ஹிதை என்ற 4 ஸம்ஹிதைகள - பிள்ளையார் பெருமை - என்பன கூறி இந்தப் புராணத்தைப் பிரவசனம்செய்து பாராயணம் செய்கிறவர்கள் பெருமாள் திருவடியைத் தட்டாமல் அடைகிறார்கள் எனவும் கூறப்பட்டுள்ளது.

**கூர்ம புராணம விளக்கம் என்ன?**

ஐந்து பாதங்கள் கொணட முன்பகுதி பின் பகுதி என இரணடு கொண்டது. பிரமன் மரீசிக்கு உபதேசித்து. லக்ஷ்மியும். பிரத்யும்னனும் உரையாடுவதாகத தொடங்கும். கூர்மரிஷிகள் இவர்கள் உரையாடல் உன்னிக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். காலங்களின தத்துவம, லயம் பற்றிய கோட்பாடு, சங்கரசரிதம் - பார்வதீ ஸஹஸ்ரநாமம் - ப்ருகுவம்சம் ஆத்ரேயவம்சவிவரணம், கிருஷ்ணன் லீலைகள், யுகதர்மங்கள்-மூவுலகு பற்றிய ஆசசரிய வருணனை - வ்யாஸ கீதை-பல புணணிய தீர்த்தங்கள் ப்ரும்ம ஸம்ஹிதை- பகவதி ஸம்ஹிதைகள் கூறப்பட்டுள்ளன. இதைப் படிப்பவர்களுக்கு நல்ல பதவி உயர்வுகள் தானே கிடைககும்.

**மதஸ்ய புராணம பற்றிய மகிமை என்ன?**

ஒரு மகிரிஷிகளின் கூட்டத்தில் வியாஸர் உபந்யாஸ வடிவில் எடுத்துரைக்கப்பட்ட புராணம். முதலில நரசிம்மன் வருணனை, மநுவிற்கும மத்ஸ்யவடிவில் உள்ள பகவானுக்கும் உரையாடலில் தொடங்கும். ஆந்திர வம்சம்பற்றிய உண்மை விளக்கம், மதனத்துவாசீ மகிமை-சந்திரன்-யயாதி சரிதங்கள்- ப்ருகுசாபம-தசாவதார வருணனை-புருவம்சம்-கிருஷ்ணாஷ்டமியின் பெருமை - தடாகவிதி மகாத்மியம், பலவிதமான விரதங்களின் பெருமை, பீமத்துவாதசியின் பெருமை, நவக்கிரகங்களைப் பற்றிய தெளிவான விவரங்கள், நான்கு யுகங்களைப்பற்றிய விஷயங்கள், மன்மத தகனம், சிவபிரானுடைய அவதாரம்-முருகன் அவதாரம்-மான்தோல்(கிருஷ்ணாஜினம்) பெருமை, சாவித்ரீ உபாக்யானம், நவக்கிரகசாந்திகள், சொப்னம். சொப்னமங்களங்கள், வாமனாவதாரத்தின் அளப்பிலாப பெருமை, பாற்கடல்கடைதல், கோயில்களில் அமைக்கப்படும் கடவுள்களின் உருவ இலக்கணம், வீடு, கோயில், அரண்மனை இவைகளைக் கட்டும முறை முதலியன அருமையாக விளக்கப் பட்டுள்ளன. இதைப்படிப்பவர்கள் முடிவில் வைகுந்தம் அடைவார்கள.

**கருடபுராணம் சீரும் சிறபபும எனன?**

இதிலும் இரண்டு கண்டங்கள் உள்ளன. திருமால் கருடனுக்குக் கூறுவதாக அமைந்தது: இப்புராணத்தின் மிகமிக அருமையான ஆராய்ச்சிக்குரிய நுணுக்கமான ஏராளமான கருத்துக்களும் தத்துவஙகளும் ஸகந்தபுராணம்போல் மண்டிக்கிடக்கின்றன. இந்த கருடபுராணத்தில் சூர்யபூஜை,

அககினிபூஜை, யோகம், விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தின் பெருமை, ம்ருத்யுஞ்ஜயபூஜை முறை, பிறரை வசீகர வைககும் அருமையான மநதிரங்கள, கோயில விக்கிரகம் பற்றிய உண்மைகள், துர்க்கைபூஜை, வீடு, மனே, கோயில், குளம், ஆறு, அரணமனே முதலிய வாஸ்து அதாவது கட்டடககலே நுணுககங்கள், மாடுகட்டும் விதம், தேவதைகளின் பிரதிஷ்டை முறை, கொடிய நரக வாணனம (நரகம், இன்னன குற்றம் செய்தவாகளுககு இன்னன நரக வேதனே என்பது பற்றி மிக அருமையாகக கூறப்பட்டிருககும. இதனே மனிதர்கள் படிததறிவது நலலது. அதனுல சிறிதளவாவது அக்கிரமங்கள் நிற்கலாம்) ஜோதிஷம், மனிதன உடம்பு அமைப்பின் பலாபலனகள் கூறும் சாமுத்திரிகா லக்ஷணம, சஙகீதம் பற்றிய பல உணமைகள், நவரத்தினஙகளின் பெருமையும் பரீக்ஷையும் - ப்ரேதம், பிசாசு இவைகளைப் பற்றிய பல கருத்துக்கள், நீதிகள், ராமாயணம், ஹரிவம்சம, ஆயுர்வேதம, நோய்களுககு மருத்துவம, கவசம், மூலிகைகளின் வகைகள அவைகளின் சிறப்புகள், செய்யுள் பற்றிய சந்தஸ் சாஸ்திரம், சபிண்டீகரணத்தின் தத்துவம், ஸ்ரீவைஷ்ணவர்களின் பெருமை, பகவான் நரசிமமன பெருமை, வேதாந்தசாரம, எந்த எந்த பாபிகள் மறுபிறவியில் எந்த எநதப பிறவி எடுக்கிருர்கள, யமலோகம் பற்றிய அருமையான விளக்கம், யமன்பெருமை, ப்ரேதங்களைப் பற்றிய பல அரிய விளக்கங்கள், பிரஸவம பற்றிய விளககங்கள், தீட்டு பற்றிய விளக்கம், தற்கொலேயின் கொடுமைகள், நாராயணபலி முதலியன இதில் உள்ளன.

**பரம்மாண்ட புராணம் பெருமை என்ன?**

இதில் பூர்வபாகம், மத்யமபாகம், உததரபாகம், உபஸம்ஹாரபாகம் என 4 பிரிவுகள் உள்ளன. ஒவ்வொன்றுககும் முறையே பரக்ரியாபாதம் அநுஷங்கபாதம், உபோத்காதபாதம, உபஸம்ஹாரபாதம் எனப்பெயர்கள். மும்மூர்த்திகளின இலக்கணம, பூமியின் நீளம் அகலம் பெருமைகள், பாரத நாட்டின சிறப்பு, அமாவாஸ்யையின் பெருமை, வேதங்களின் பெருமை, சப்தரிஷிகளின் கதை, கந்தாவாகள் பற்றிய விசேஷக்குறிப்பு, விஷ்ணுவின் பெருமை, எதிர்காலத்தில் மககளின் எணணம், செயல், பேசசு, வடிவம், குணம் முதலியவைகளின விளககம, சைவாகளின பெருமை முதலியன கூறப்பட்டுளளன.

''அஷ்டாத ச புராணனி யஃ ச்ருணோதி நரோதத்மஃ
கதயேத் வா விதானேன நேஹ பூயஃ ஸ ஜாயதே॥

என்றபடி இந்த 18 புராணங்களைப் படிப்பது, கேட்பது, அதன் பெருமையைப் படிப்பது, பிறருககும சொல்வது எனபதால் அவன் மறுபடியும் இநத இருள்தரும மாஞாலத்துள் பிறககவேமாட்டான். உய்ந்து போவான எனப்பலனும் கூறப்பட்டுள்ளது.

(தொடரும்)



கை வேலைப்பாடு : திரு. நாகேஸ்வரராவ் - விஜயநகரம்.

# எங்கும் உளன்

கடவுளை நீ பார்த்திருக்கிறாயா? இப்படி ஒருவர் கேட்கிறார் கடவுளைக் காட்ட முடியுமா? - இது மற்றொருவருடைய கேள்வி. இன்னொருவர் கேட்கிறார், 'கடவுள் எங்கே இருக்கிறார்?'

கடவுளின் தன்மையை அறிய முற்பட்டவர்களின் கேள்விகள் அல்ல இவை. அல்லது கடவுளின் இருப்பை கடவுள் உண்மையைக் காணமுயன்று தோற்றுப் போனவர்களின் கேள்விகளும் அல்ல இவை. பகுத்தறிவு வாதம் என்று சொல்லிக் கொண்டு, கடவுளை மறுப்பவர்களின் கேள்விகளே இவை. எதையும் மறுத்துப் பேசுவோர் உலகில் நெடுங்காலமாகவே இருந்துவருகின்றனர். 'உண்டு' என்று பலர் கூறுவதை, 'இல்லை' என்று மறுப்பவர்கள் சிலர் இருப்பதை இன்னும் நாம் பார்க்கிறோம். 'உலகத்தார் உண்டென்பதை இல் என்பார்' என இவர்களை வள்ளுவப் பெருந்தகை குறிப்பிடுவார்.

இவர்கள் இவ்வாறு பேசுகிறார்களே என்று வருத்தம் அடையத் தேவையில்லை. ஆனால் இந்தக் கேள்விகளையும் நாம் புறக்கணித்து விடக்கூடாது. சிந்தித்து உண்மையைக் காட்டுவதற்கு இந்தக் கேள்விகளே உதவியாக அமைகின்றன. இக் கேள்விகளுக்கு விடை காண்பதன் மூலம் 'இறைவன் எங்கும் உளன்' என்று நிலைநாட்ட முடியும்.

புலவர் பெ. கிருஷ்ணராஜன், எம்.ஏ.
சேலம் - 6.

கடவுளை உணர முடியுமே தவிரக் காண முடியாது. 'அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே' எனக் கூறிய சமயச் சான்றோர்களும் கண்ணுக்குத் தெரியும் இறைவனின் பருப்பொருள் தன்மையைக் கூறவில்லை; அன்புக்குக் கட்டுப்படும் கடவுளின் இயல்பையே சுட்டினார்கள்.

எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்திருக்கிறது காற்று. ஆனால் அது நமது கண்ணுக்குத் தெரிவது இல்லை. நம்மீது படும் பொழுது நாம் அதனை உணர்கிறோம். கோடைக் காலம். புழுக்கமாக இருக்கிறது. நாம் விசிறிக்கொண்டு வீசிக்கொள்கிறோம். அல்லது மின் விசிறி கொண்டு காற்றைப் பெறுகிறோம். அது நம் மீது பட்டு நமது புழுக்கத்தைத் தீர்க்கிறது; நமது மகிழ்ச்சியைத் தருகிறது.

நமது கண்ணுக்குத்தெரியாததனால் காற்று என ஒன்று இல்லை என்று நாம் சொல்வது இல்லை. அது போலவே நேரில் காண முடியாத

தால் கடவுள் இல்லை என்று நாம் சொல்லிவிட முடியாது. கோடை வெப்பத்தில் விசிறிக்கொண்டு நாம் முயற்சி செய்யும் போது புழுக்கம் தீர்த்து இனிய குளிர்ச்சியை உண்டாக்குகிறது காற்று. காற்றைப் போலவே கடவுளும் எங்கும் நீக்கமற நிறைந்து விளங்குகிறார். துன்பம் நேரும் காலத்தில் வழிபாடு செய்வதன் மூலம் துயரம் நீங்கி மகிழ்ச்சி அடையும் போது கடவுள் இருப்பதை நாம் உணர்கிறோம். காற்றை நாம் எப்படிப் பார்க்க முடிவதில்லையோ, அவ்வாறு கடவுளையும் காண இயல்வது இல்லை. ஆனால் காற்றை உணர முடிவது போலக் கடவுளையும் நாம் உணர முடிகிறது.

உணரக் கூடிய ஒன்றை மற்றவர்களுக்குக் காட்ட முடியாது; உணர்த்தத்தான் முடியும். சர்க்கரை இனிக்கிறது. 'இந்த இனிப்பைக் காட்டு' என்று யாராவது கேட்டால், நாம் காட்ட இயலாது. சர்க்கரையை அவர் உண்ணும்படியாகச் செய்து அதிலிருக்கும் இனிப்பை அவரே உணரும்படியாகத்தான் செய்யமுடியும். 'கடவுள் இருக்கிறார்' என்ற உண்மையும் இப்படிப்பட்டதே. ஒவ்வொருவரும் பக்தியினால் கடவுளைக் காட்ட முடியாது.

கடவுள் எல்லா இடங்களிலும் கலந்து விளங்குகிறார். அவர் நடப்பதும் இல்லை; பறப்பதும் இல்லை. ஆனால் உலகம் முழுவதும் அவர் இருக்கிறார். உடலாகவும்-உயிராகவும்-அவைகளுக்கு மேலாகவும் அவர் உயர்ந்து விளங்குகிறார்.

நடவாய் பறவாய் நாடெங்கும்
இருப்பாய்
உடலாய் உயிராய் உயர்வாய்
பெருப்பாய்

என மாயூரம் வேதநாயகம் பிள்ளை கூறுகிறார்.

திருமாலிடம் பேரன்பு வைத்த ஆழ்வார்கள் இறைவன் எங்கும் இருக்கிறான் என்பதை வற்புறுத்தியுள்ளனர். உலகம் பஞ்ச பூதங்களால் ஆனது நிலம்-நீர்-தீ-காற்று-வானம் என்னும் ஐந்து பெரும் பொருள்களே உலகம். இவ்வைந்து பொருள்களை அடிப்படையாகக் கொண்டு பரந்துவிரிந்துள்ள பொருள்களில் எலலாம் உடலில் உயிர்போல இறைவன் மறைந்து நிற்கிறான்என்று திருவாய்மொழிப் பாசுரத்தில்,

திடவிசும்பு, எரி, வளி, நீர், நிலம்
இவைமிசைப்
படர் பொருள் முழுவதுமாய் அவை
அவை தோறும்
உடலமிசை உயிரெனக் கரந்துஎங்கும்
பரந்துளன்

என நம்மாழ்வார் கூறுகிறார். இந்தக் கருத்தை நாயன்மார்களும் மறுக்கவில்லை. மணிவாசகப் பெருந்தகை தமது திருவாசகம் என்ற நூலில்,

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய்
இன்மையுமாய்

என்று கூறி நம்மாழ்வார் கருத்துக்கு உடன்படுகிறார்.

பாட்டுக்கொரு புலவன் என்ற பாராட்டைப் பெற்ற பாரதியும் இறைவன் இருக்குமிடங்களைச் சொல்லுகின்றார். 'சூரியனில் இறைவன் கலந்திருக்கின்றான். அந்தச் சூரியனின் கதிர்களிலும் அவனே இருக்கின்றான். கரிய மேகமாக - அந்த மேகங்கள் மோதும் போது உண்டாகும் மின்னலாக - மேகம் பொழியும் மழை நீராக - நீர் பெருகி ஓடும் வெள்ளமாக இருப்பவனே' என்று பாடுகின்றார்.

பரிதிஎன்னும் பொருளிடை ஏய்ந்தனை!
பரவும்வெய்ய கதிரெனக் காய்ந்தனை!
கரியமேகத் திரளெனச் செலலுவை!
காலுமின்னென வந்துயிர்
கொல்லுவை!
சொரியுநீரெனப் பல்லுயிர் போற்றுவை!
சூழும் வெள்ளம் என உயிர்
மாற்றுவை!

என்பது பாரதியின் பாடல். பாரதியின் பாடலும் நம்மாழ்வாரின் கருத்தினை அடியொற்றியே காணப்படுகிறது. இதோ நம்மாழ்வாரின் திருவாய்மொழி.

பரந்ததண் பரவையுள் நீர்தோறும்
பரந்துளன்
பரந்த அண்டம் இது என,
நிலமவிசும்பு ஒழிவறக்
கரந்தசில இடம்தோறும்,
இடம திகழ் பொருள்தோறும்
கரந்து எங்கும் பரந்துளன்.

'விரிந்த கடலிலும் கடல் நீரிலும் இறைவன் கலந்திருக்கிறான்; நிலமென்றும் வானமென்றும் இல்லாமல் அண்டம் முழுவதும் பரவியிருக்கிறான்; மறைவான இடங்களிலும் உள்ள பொருள்களில் எல்லாம் அவன் இருக்கிறான்' என்பது இப்பாடலின் கருத்து.

எனவே ஆழ்வார் நாயன்மார் போலச் சமயச் சான்றோர்களாக இருந்தாலும் - மாயூரம் வேத நாயகம் பிள்ளை பாரதியார் போலப் புற உலக உறவோடு தெய்வ பக்தியில் ஈடுபட்டவர்களாக இருந்தாலும்- அவர்கள் அனைவரும் 'இறைவன் எங்கும் இருக்கிறான், எல்லாமாக இருப்பவனும் அவனே' என்பதை நன்கு தெளிந்திருந்தனர் எனத்தெரிகிறது. நமது வேதங்களும் உபநிடதங்களும் காலம் காலமாக இந்தக் கருத்தைத் தான் வற்புறுத்தி வருகின்றன. பாரதப் போரின் போது பார்த்தசாரதி அருளிய கீதையின் தத்துவமும் இதுவே. "அர்ஜுனா! வெயிலும் நானே; அதை நிறுத்துபவனும் நானே. மழையைத் தருபவனும் நானே; அதை நிறுத்துபவனும் நானே. வாழ்வும் நானே; மரணமும் நானே. இருப்பும் நானே; இலலாமையும் நானே" என்று பகவத்கீதை ஒன்பதாவது அத்யாயத்தில் 19-வது சுலோகம் கூறுகிறது.

இறைவன் இல்லாத இடமேஇல்லை ன்பதைப் புராணங்களும் எடுத்துக் ாட்டுகின்றன. நாராயணனைத் விர வேறு எவரையும் வணங்காத 'ன் பிரகலாதன். ஆனால் அவன் ந்தையாகிய இரணியனோ தன்னைத் விர வேறு தெய்வமில்லை என்றும் ன்னுடைய பெயரை உச்சரித்துத் ன்னை மட்டுமே வணங்க வேண்டும் னறும் உத்தரவிடுகிறான். பிரக ாதன் தந்தையை மறுத்து, திரு ாலின் திருப்பெயர் மந்திரத்தையே சால்லுகிறான். இரணியனுக்குக் காபம பொங்குகிறது. "எப்போ ும் நாராயண மந்திரத்தையே சால்லிக்கொண்டிருக்கும் நீ, அந்த ாராயணனைக் காட்ட முடியுமா? வன் எங்கே இருக்கிறான்? இதோ அருகிலிருக்கும் இந்தத் தூணில் அவன் இருக்கிறானா?" என்று கேலி யாகக் கேட்டான். அப்பொழுது பிரகலாதன்,

சாணினும் உளன்ஓர் தனமை
அணுவினைச் சதகூறிட்ட
கோணினுமு உளனமா மேருக்
குனறினும் உளனஇந்நின்ற
தூணினுமு உளன்முன் சொனன
சொல்லினும் உளன்
(கமபராமா)

எனறு கூற, நாராயணன் நரசிங்க மாக அத்தூணிலிருந்து வெளிப்பட் டதைப் பிரகலாத சரிதம் நமக்கு உணர்த்துகிறது. இரணியன வதை யுடை இந்த நிகழ்ச்சியைக் கூறும்

எங்கும்உளன் கண்ணன் என்று
மகனைக் காய்ந்து
இங்கில்லையால் என்றுஇரணியன்
தூண்புடைப்ப
அங்குஅபபொழுதே அவன்வீயத்
தோன்றிய
சிங்கப்பிரான் பெருமை ஆராயும்
சீர்மைத்தே

என்னும் திருவாய்மொழிப் பாடல் 'எங்கும் உளன் இறைவன்' என்பதை விளக்குகிறது.

எனவே தான் 'பார்க்கும் இட மெங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானநதமே' என்று நாம் பாடு கிறோம்.

★

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. பை. |
|---|---|---|
| அன்னமய்யா ஓர் அறிமுகம் | ... | 1—00 |
| பகவத் சந்தேஸம் | ... | 0—50 |
| இந்து சமயக் கையேடு | ... | 1—50 |
| ஹனுமான் | ... | 0—50 |
| கண்ணன் பேசுகிறான் | ... | 0—50 |
| மாங்கல்ய விருத்தி ஸ்தோத்திரம் | ... | 0—10 |
| சித்திர சுப்ரபாதம் | ... | 8—00 |
| ஸ்ரீவேங்கடேஸ்வர சுப்ரபாதம் (பொருளுடன்) | ... | 0—50 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | ... | 0—15 |
| சித்தாந்த சங்கரஹம் | ... | 2—50 |
| திருவேங்கட கலசம் | ... | 0—15 |
| சித்திரத் திருப்பாவை | ... | 8—25 |
| ஏழுமலை யாத்திரை | ... | 0—75 |
| ஹனுமன் கதை | ... | 2—00 |
| திருமலை வழி காட்டி | ... | 0—10 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரா கல்யாணம் | ... | 11—50 |
| கண்ணன் கதை | ... | 2—00 |
| நித்யாநுஸந்தானம் (வடகலை) | ... | 4—00 |
| நித்யாநுஸந்தானம் (தென்கலை) | ... | 4—50 |
| அபிமன்யு | ... | 2—00 |
| கிருஷ்ணனும் நரகாசுரனும் | ... | 2—00 |
| பகவத் கீதை | ... | 2—00 |

## ஆங்கிலம்

| | | Rs. Ps. |
|---|---|---|
| Administration of Temples | . | 5—00 |
| Alamel Mangapura | .. | 0—25 |
| Ekantaseva | .. | 5—00 |
| Govinda brochure | .. | 3—00 |
| History of Tirupati Vol: II | .. | 15—00 |
| Melodies of staff notation | .. | 10—00 |
| Lord Venkateswara & Alwars | .. | 1—00 |
| Acharya Hridayam | .. | 8—25 |
| Theory of Knowledge | . | 5—00 |
| Tirupati Sri Venkateswara | .. | 40—00 |
| S.V. Suprabhatham with meaning | .. | 0—50 |
| Heart of Bhagavatham | .. | 3—00 |
| S.V. Sachitra Suprabhatham | .. | 11—00 |
| Tirumala Temple | .. | 80—00 |
| Pilgrimage to Uttarakhanda | .. | 3—75 |
| Tiruppavai | .. | 10—00 |
| Vision of Aryan Glory | .. | 1—50 |
| Uddavageetha | .. | 5—00 |
| The Wise Minister & other stories | .. | 1—00 |
| Sree Venkateswara | .. | 1—00 |
| Vishnu Sahasranamam 999 (Namams) | .. | 1—00 |
| Harischandra | .. | 1—00 |
| Kardama & Devahuti | .. | 1—00 |
| Maharshi Valmiki | .. | 2—00 |
| Druva | .. | 2—00 |
| Bhishma | .. | 2—00 |
| Vedavyasa | .. | 2—00 |
| Tenali Ramakrishna | .. | 2—00 |
| Ganesha | .. | 2—00 |
| Thyagaraja | .. | 2—00 |
| Drowpadi | .. | 2—00 |
| Bhageerada | .. | 2—00 |
| Prahlada | | 2—00 |
| Andal | .. | 2—00 |
| Kalidasa | .. | 2—00 |
| Vadiraja | .. | 2—00 |
| Pillai Lokacharya | .. | 2—00 |
| Dhadhichi | .. | 2—00 |
| Nachikata | .. | 2—00 |
| Namadeva | .. | 2—00 |
| Garuda | .. | 2—00 |
| Ramanujacharya | .. | 2—00 |
| Narada | .. | 2—00 |
| Vedantadesikaru | .. | 2—00 |
| Why am I Hindu? | .. | 1—50 |
| Purushasuktham | .. | 2—00 |
| History of Tirupati Vol I | .. | 15—00 |
| Homage to Kalankari | .. | 120—00 |
| Yoga & Yoga | .. | 2—00 |
| Viswamithrudu | .. | 2—00 |
| Idle child | | 0—05 |

## வடமொழி

| | | ரூ. பை. |
|---|---|---|
| எஸ். வி. அஷ்டோத்ரம் | .. | 0—62 |
| எஸ். வி. சுப்ரபாதம் | .. | 0—12 |
| தத்வ ஸங்க்யானம் | .. | 2—00 |

குறிப்பு: பிரதிகளுக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

THE WELFARE OFFICER
Publication Wing (Administrative Building)
T. T. D. TIRUPATI.

# மார்கழியும் திருவாதிரையும்

தை மாதம் முதல் ஆனி மாதம் முடிய உள்ள ஆறு மாத காலத்திற்கு உத்திராயணம் என்று பெயர். ஆடி முதல் மார்கழி மாதம் முடிய உள்ள ஆறு மாத காலத்திற்கு தக்ஷிணாயனம் என்று பெயர். தேவர்களுக்கு உத்திராயணம் என்பது ஒரு பகல். தக்ஷிணாயனம் என்பது ஒரு இரவு. ஆகையால் வருடம் என்பது தேவர்களுக்கு ஒரு பகலும் ஒரு இரவும் சேர்ந்த ஒரு நாளாகும். இவ்வாறு புராணங்கள் கூறுகின்றன.

மார்கழி மாதம் பன்னிரெண்டு மாதங்களில் மிகவும் புனிதமான மாதமாகும். ஸ்ரீ கிருஷ்ண பகவான் கீதையில்,

'' மாஸானாம் மார்க்க சீர்ஷோ......''

'' மாதங்களில் நான் மார்கழியில் இருக்கிறேன்''

என்கிறார்.

மார்கழி மாதம் தக்ஷிணாயனத்தின் ஆறாவது (அதாவது கடைசி) மாதமாக உள்ளது. தேவர்களின் இரவு காலம் முடியும் தறுவாயில் உள்ளது. இதை உஷக்காலம் என்றும் ''வைகறைப் பொழுது'' என்றும் கூறுகிறார்கள். ஆகையால் இந்த மாதத்தில் எவர்கள் விடியற்காலையில் எழுந்திருந்து பக்தி ஸ்ரத்தையுடன் பகவானை பஜிக்கிறார்களோ அவர்கள் ஸர்வாபீஷ்டங்களையும் அடைகிறார்கள் என்று புராணம் கூறுகிறது.

மார்கழி மாதத்தில் இன்றும் பக்தர்கள் நான்கு மணிக்கு வீதிகளில் பஜனை செய்தும் வருகிறார்கள். கோவில்களில் திருப்பாவை, திருவெம்பாவை பக்திப் பாடல்கள் பாடப்படுகின்றன. ப்ரபந்தங்களின் ஸாரம் திருப்பாவை. திருமுறைகளின் ஸாரம் திருவெம்பாவை. விஷ்ணு பக்தர்களும், சிவ பக்தர்களும் முறையே திருப்பாவை திருவெம்பாவை இவைகளை பக்தி ஸ்ரத்தையுடன் தொன்று தொட்டு வழிபட்டு வருகிறார்கள்.

பெரும்பாலும் ப்ரம்மோத்சவம் என்னும் உத்சவம் கோவில்களில் பங்குனி சித்திரை மாதங்களில் நடைபெறுகின்றன. ஆனால் மார்கழி மாதத்தில் இரண்டு க்ஷேத்திரங்களில் தான் ப்ரம்மோத்சவம் நடைபெறுகிறது. ஒன்று நூற்றெட்டு வைணவத் திருப்பதிகளில் ஒன்றான ஸ்ரீரங்கம். மற்றது நூற்றெட்டு சைவத் திருப்பதிகளில் ஒன்றான சிதம்பரம்.

ஸ்ரீரங்கத்தில் உள்ள பெருமானின் பெயர் ரங்கராஜா. ரங்கம் என்றால் நாடக மேடை. அதற்கு ராஜா ரங்கநாதர். சிதம்பரத்தின் பெருமானின் பெயர் நடராஜா. இவர் கூத்தாடுபவர்களுக்கு ராஜா. இவருடைய நடனம் ஆனந்தக் கூத்தன் நடனம். சிதம்பரத்தில் காணும் திருவுருவம் ஆனந்த தாண்டவம்.

இருவரும் ஆனந்த மூர்த்திகள். ரங்கநாதர் ஆனந்த யோக நித்திரையில் ஆழ்ந்திருக்கிறார். நடராஜர் ஆனந்தம் தாங்காமல் நடனமாடுகிறார். (கூத்தாடுகிறார்) அமரகோசத்தில் ''மஹாகாலோ மஹா நட:'' என்று வருகிறது. அவர் ஆடாவிட்டால் இந்த உலகம் ஆடாது; அசையாது. அதனால்தான் அவர் ஆடுகிறார். ஆடிக்கொண்டே இருக்கிறார்.

நடராஜருடையது பொங்குகிற ஆனந்தம். ரங்கநாதருடையது அடங்கியுள்ள ஆனந்தம். நடராஜருடையது ஆனந்த முத்திரை. ரங்கநாதரது நித்ரா முத்திரை. இரண்டு பேருமே தெற்கு நோக்கியுள்ளார்கள்.

இருபத்தேழு நக்ஷத்திரங்களுள் இரண்டு நக்ஷத்திரங்களுக்குத்தான் 'திரு' என்ற அடைமொழி உண்டு. அவை ஆதிரை, ஓணம். இவைகளைத்தான் ''திருவாதிரை'' ''திருவோணம்'' என்கிறோம். திருவாதிரை சிவனுக்கும், திருவோணம் விஷ்ணுவுக்கும் ஏற்பட்ட நக்ஷத்திரங்கள்.

மார்கழி மாதத்தில் பௌர்ணமியன்று திருவாதிரை விழா நடராஜப் பெருமானுக்கு நடைபெறுகிறது. இம்மாதத்தில்தான் குளிர் அதிகம். பனி இரவு முழுவதும் பெய்து கொண்டே இருக்கும்.

சிவபெருமானுடைய சிரசில் கங்கையும் சந்திரனும் வீற்றிருக்கிறார்கள். இவர்கள் மிகவும் குளிர்ச்சியானவர்கள். மற்றும் சிவபெருமானின் உடல் கை கால் முழுவதும் சீதளமான பாம்புகள் சுற்றியுள்ளன. இவை போதாதென்று பனிமலையான ஹிமவானின் புத்ரி பார்வதி தேவி சிவபெருமானின் இடது பாகத்தை ஏற்றுள்ளாள்.

திரு. சி. ஆர். திருவேங்கடத்தான்,
டால்மியாபுரம்

இவ்வளவு குளிர்ந்திருந்தும் நாம் அவருக்கு அபிஷேகம் செய்கிறோம். சந்தனாபிஷேகம் செய்கிறோம். அதுவும் பௌர்ணமியன்று. பௌர்ணமி மார்கழி மாதம் உஷக் காலத்தில் அபிஷேகம் செய்கிறோம். எப்படித்தான் சிவபெருமான் இவைகளை ஏற்றுக் கொள்கிறாரோ?

இதற்கான அருமையான பதில் ஒன்றை ஒரு சிவ பக்தர் கூறுகிறார். ''சிவபெருமானே! இவ்வளவு சீதளங்களையும் தாங்கும் சக்தி உன்னிடத்தில் இல்லை. அது என்னிடத்தில் தான் உள்ளது. எப்பொழுதும் உலக ஆசாபாசங்களில் அடிபட்டு தவித்துக் கொண்டிருக்கும் என்னுடைய ஹ்ருதயத்தில் உன்னை அமர்த்தியுள்ளேன். ஆகையால் அவ்வளவு சீதளங்கள் இருந்தாலும் அவை எல்லாம் ஒரு நிமிடத்தில் மறைந்துவிடும். இதற்கு நான்தானே காரணம்''. சிவ பெருமானுக்கு மார்கழி மாதத்தில் பௌர்ணமியன்று அபிஷேகம் செய்வதன் தத்துவம் இதுதான்.

திருவாதிரை என்றதும் நமக்கு சிதம்பரம், பேரூர், மதுரை போன்ற க்ஷேத்திரங்களின் ஞாபகம் வரும். இத்திருவாதிரைத் திருவிழா லால்குடியிலும் மிக விமரிசையாக ஒவ்வொரு வருடமும் கொண்டாடப்பட்டு வருகிறது.

திருத்தவத்துறை என்று அழைக்கப்படும் லால்குடி, திருச்சியிலிருந்து திருச்சி - மதராஸ் குறுக்கு வழியில் சுமார் 20 கி.மீ. தொலைவில் உள்ளது. இத்தலத்தின் பெருமானின் பெயர் சப்த ரிஷீஸ்வரர். ஏழு ரிஷிகள் இங்குள்ள பெருமானை வழிபட்டு முக்தி யடைந்ததாகக் கூறப்படுகிறது. அம்பாளின் நாம தேயம் பெருந்துறைப் பிராட்டியார். இக் கோவிலில் இத்திருவிழா பத்து நாட்கள் நடைபெறுகிறது.

கோவிலின் முன் பக்கத்தில் உள்ள மண்டபம் தோரணங்களாலும் வண்ண விளக்குகளாலும் நன்றாக அலங்கரிக்கப்பட்டு அங்கு சந்திரசேகரப் பெருமானும், அம்பாள் உமையும் கொலுவீற்றிருப்பார்கள். விலையுயர்ந்த நகைகளாலும், பட்டுப் பீதாம்பரங்களினாலும் அலங்கரிக்கப்பட்டு ஸ்வாமியும், அம்பாளும் எழுந்தருளியிருக்கும் காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும்.


கௌதமேசுவரர் கோயில், கும்பகோணம்
திரு. என். ராமகிருஷ்ணன், மாயூரம்.

உபன்யாசங்களும், சங்கீதக் கச்சேரிகளும் பத்து நாட்களும் நடைபெறுகின்றன. ஆயிரக்கணக்கான பக்தர்கள் தினமும் கோவிலுக்கு வந்து இசை விருந்தை பருகி விட்டு ஸ்வாமி அம்பாள் அருளையும் பெற்றுக் கொண்டு செல்கிறார்கள்.

ஒன்பதாவது நாள் சோமஸ்கந்தர் நன்றாக அலங்கரிக்கப்பட்டுக்கோவிலை சுற்றியுள்ள வீதிகளில் உலா வருவார். அன்றைய தினம் இரவு நடராஜப்பெருமானுக்குப் பன்னிரெண்டு மணி முதல் விடியற்காலம் ஐந்து மணிவரை அபிஷேகம் நடைபெறும். பக்தர்கள் பால், தயிர், சந்தனம், தேன், பழங்கள், விபூதி முதலியவற்றை அபிஷேகத்திற்குக் கொண்டு வருவார்கள். குளிரையும் பொருட்படுத்தாமல் பக்தர்கள் ஆயிரக்கணக்கில் இரவு முழுவதும் கோவிலில் தங்கி தரிசனம் செயவார்கள்.

அடுத்த நாள் அதாவது திருவாதிரை நாளன்று நடராஜப் பெருமானும், அம்பாள் சிவகாமியும் புஷ்பங்களால் நன்கு அலங்கரிக்கப்பட்ட தனித்தனி சப்பரங்களில் நானகு வீதிகளிலும் சுற்றுலா வரும் காட்சியைக் காணக் கண் கோடி வேண்டும்.

இவ்விழாவைப் பற்றிய ருசிகரமான கதை ஒன்று உள்ளது. நடராஜப் பெருமான் ஒரு தேவதாசியின் வீட்டிற்குப் போய்விட்டு நேரங்கழித்து வீட்டிற்கு வந்ததாகவும் இதனல் கோபமடைந்த சிவகாமி கதவைத் திறக்க மறுத்ததாகவும் மாணிக்க வாசகர் இவ்விருவருக்கும் இடையே மத்யஸ்த்தம் செய்து வைத்ததாகவும் சொல்லப்படுகிறது.

★

# ஸ்ரீ ஆண்டாள் ஜாதக ஆராய்ச்சி

ஸ்ரீ வைகுண்டத்தில் எம்பெருமானிடம் பூமிதேவி ஒரு முறை அவரை அடையும் உபாயங்களில் சிறந்ததான உபாயம் பற்றிக் கூறுமாறு கேட்டாள். எம்பெருமான் அதற்குக் கீழ்க்கண்டவாறு பதிலிறுத்தார்: 'கலியுகத்தில் திருக்குறுங்குடி என்னும் க்ஷேத்ரத்தில் விஷ்ணு பக்தன் ஒருவன் கார்த்திகை மாதம் சுக்ல பக்ஷத்வாதசியன்று பிராம்ஹ முகூர்தத்தில் பகவானைப் பாட வீணாபாணியாய்க் கிளம்பி வரும் சமயம், ஒரு பிரம்ம ராக்ஷஸனால் பிடிக்கப் பட்டு வருந்தினான். பகவத் ஸன்னிதியில் வழக்கம் போல் பாட வேண்டிய பாடல்களைப பாடிவிட்டு அவனுக்குரிய ஆகாரமாக வருவதாக அனேக வாக்குறுதிகளை அந்த பக்தன் அளித்தான். அதே போல் பகவானைப் பாடி விசேஷமாக ஸந்தோஷிப்பித்து விட்டு ஸத்யம் தப்பாமல் அந்த பிரம்ம ராக்ஷஸனின் இரையாக மீண்டும் வந்து சேர்ந்தான். எனவே இவன் மஹானுபாவன் என்பதனை அநத ராக்ஷஸன் நன்கு உணர்ந்து இவன் இன்று பாடின பாட்டின பலத்தைத் தந்து தன்னை கோரமான ஜன்மத்திலிருநது விடுவிக்க வேண்டுமென்று யாசித்தான். இந்த விஷ்ணு பக்தனும், தான் அன்று பாடின பாட்டின் இடையில் பயின்று வரும் கைசிகம் என்ற ஒரே ஒரு ஸ்வரத்தின் பிரபாவத்தால் அவனை விடுவித்துப் பெரிய வீடாகிய மோக்ஷத்தையும் கொடுத்தான்' என்கிற பிரபாவத்தை பூமிப் பிராட்டியிடம் பகவான் தெரிவித்தார்.

எனவே பூமிப் பிராட்டியும் எல்லா உபாயங்களிலும் இந்த கான ரூபமான உபாயம்தான் சிறந்தது என்று திருவுள்ளம் பற்றி இதையேதான் பூலோகத்தில் அவதரித்து அனுஷ்டித்துக் காட்டி, மனித குலத்திற்குத் தொண்டாற்ற வேண்டும் என்ற நோக்கத்தோடு உரிய காலத்தில் ஸ்ரீ ஆண்டாளாக அவதரித்து நம்மை உய்விக்க வந்தாள். ஸ்ரீ ராமனாக எம்பெருமான் அவதரித்த போது ஸீதையாகவும், ஸ்ரீகிருஷ்ணனாக அவதரித்தபோது ஸ்ரீ ருக்மிணி தேவியாகவும், ஸ்ரீரங்கநாதன் அர்ச்சாரூபியாக எழுந்தருளி இருக்கும் இந்த சமயத்தில் ஸ்ரீ ஆண்டாளாகவும் அவதரித்து நம்மை என்றென்றும் ரக்ஷித்து வருகிறாள்.

இனி ஸ்ரீ ஆண்டாளின் ஜாதக விசேஷத்தைப் பார்ப்போம்.

1. துலா லக்னத்திறகுப் பத்தாமிடத்தில் லக்னாதிபதி சுக்கிரன், குரு, புதன், சூர்யன், சுக்கிரன் ஆகிய நான்கு கிரகங்களுடன் கூடியிருப்பதால் ஆண்டாள் துறவறத் தன்மை பூண்டு மற்றையோருக்கும் பகவான் புகழை எடுத்து உபதேசித்தாள். சந்திரா லக்னத்திற்கு 12ல் இந்த கிரகக் கூட்டு அமைந்திருப்பதும் ஆண்டாளின் தெய்வீகத் தன்மையை உலகிற்குப் பறைசாற்றுகின்றது.

2. பாக்கிய ஸ்தானாதிபதியும் மோக்ஷ ஸ்தானாதிபதியும் ஒருவனே. அவன் புதன். புதன் பெருமாள் அருளைக் குறிப்பான. அன்றியும் பூர்வ புண்ய ஸ்தானாதிபதி சனியும் வேங்கடவன் அருளைக் குறிப்பான். இந்த பூர்வ புண்ய ஸ்தானாதிபதியுடன் புதன் சேர்க்கை பெற்று 10மிடத்தில் கேந்திர மேறியிருப்பது, அயர்வறும் அமரர்கள் அதிபதியான எம்பெருமான் அருளை இவ்வாண்டாள் எந்த அளவுபெற்றாள் என்பதைஉள்ளங்கை நெல்லிக்கனிபோல காட்டுகிறது.

---

*திரு. பி. சுந்தரராஜன் எம் ஏ பி.எட.*
*பழமார்னேரி.*

---

3. அம்சத்தில் சுக்கிரன் உச்சமாக இருக்கிறார். இவர் களத்திர காரகன் அன்றியும் ஸப்தமாதிபதியான புதன் ஸப்தமத்திலேயே உச்சம் பெற்று விளங்குவதால் இவனால் தன் காதலில் எண்ணியது எண்ணியாங்கு எய்த முடிந்து அழகிய மணவாளனையே தன் மணாளனாகப் பெறும் பாக்கியம் கிட்டியது.

4. அம்சத்தில் சுக்கிரன், குரு, புதன், சனி, செவ்வாய் ஆகிய கிரகங்கள் உச்சம். சக்ரவர்த்தித் திருமகனான இராமபிரானுக்கும் 5 கிரகம் தான் உச்சம். கண்ணபிரானுக்கு 6 கிரகம் உச்சம. நம்மை வாழ்விக்க வந்த கோதைப் பிராட்டிக்கும் 5 கிரகம் உச்சம். எனவே எம்பெருமாட்டியான இவ்வன்னை பூமிப் பிராட்டியின் திருவவதாரமே என்பதில் எள்ளளவும் ஐயமில்லை (ஸ்ரீ ராமர், கிருஷ்ணர் ஜாதக ஆய்வுகளை முன்பே ஸப்தகிரி நேயர்கட்கு வழங்கியுள்ளேன்.)

5. ராசியிலும் அம்சத்திலும் லக்னத்திற்கு இரண்டாமிடத்து அதிபன் அதாவது வாக்கு ஸ்தானாதிபதி செவ்வாய். இவர் ராசியில் லக்ன கேந்திரத்திலும், அம்சத்தில் உச்சமாகவும் உள்ளார். ராசி அம்சம் ஆகிய இரண்டிலும் குருவால் செவ்வாய் பார்க்கப்படுகிறார். இதனால் ஆண்டாளின் வாக்சாதுர்யம் அளவிடற்கரியதாக இருந்திருக்கிறது. குரு, ராசி அம்சம் ஆகிய இரண்டிலும் உச்சமாகி வர்கோத்தமம் பெறுவது இவ்வன்னையின் தெய்வீகக் கவிகட்குரிய அத்தாட்சியாகும். கவித்வத்திற்குரிய சுக்ரனும், புத்திக்குரிய புதனும் குரு சம்பந்தம் பெற்று 10ல் அமர்ந்துள்ளார்கள். 10 மிடம் கர்மம் என்னும் தொழிலைக் குறிக்கும். இப்பிராட்டியின் தொழிலே

| | | | |
|---|---|---|---|
| | | | கேது |
| | ஸ்ரீ ராசி | | சூரி. பு குரு. சுக் சனி |
| | | | சந் |
| ராகு | | ல/செவ் | |

ஸ்ரீ ஆண்டாள்
திருவவதார
ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| ல/சுக் | | ராகு | |
| | ஸ்ரீ அம்சம் | | குரு |
| செவ் | | | |
| | சந் கேது | சனி | சூரி புத |

எம்பெருமானைப் பற்றிக் கவி வரைதலாயிற்று. எம்பெருமானைப் பற்றிப் பேசுதலன்றி வேறொன்றும் அறியாள் ஆயினள்.

6. கேந்திரத்தில் புதன் இருந்தால் தமிழ் மொழியில் சிறந்து விளங்குவர் என்றும், குரு சுக்ரர் இருந்தால் சாஸ்திர வித்வான் என்றும் ஜோதிடவிதி கூறுவது ஆண்டாள் அம்மையின் விஷயத்தில் வெகுவாகப் பொருந்தும். கேந்திரமான 10ல் புதன், குரு, சுக்ரர் இருப்பதால் ஆண்டாளின் தமிழ் மொழி அறிவும், சாஸ்திர நூல் தேர்ச்சியும் அளவிடற்கரியனவாக அமைந்தன.

7. மூன்றில் ராகு அல்லது கேது இருப்பின் நிறை பொருள், புகழ், லக்ஷ்மி கடாக்ஷம் என்பது விதி. இவ்வம்மைக்கு 3ல் ராகு இருப்பதால் லக்ஷ்மி தேவியால் கடாக்ஷிக்கப்படும் எம்பெருமானே இப்பெருமாட்டியை விரும்பி நயந்தவன் ஆனான்.

8. 10ல் சூர்யன், புதன், குரு, சுக்ரன், சனி ஆகியோரில் ஒருவர் இருந்தாலே தொட்ட காரியம் வெற்றி அடையும் என்பது விதி. ஆண்டாளுக்கு இவ்வைந்து கிரகமுமே சேர்ந்து இருப்பதால், எம்பெருமானைத் திருமணம் முடித்தல் என்று தான் பற்றி நின்ற காரியத்தில் ஊக்கம் தளராதவளாய் அதில் வெற்றி பெற்று மதுசூதனன் கைத்தலம் பற்றினாள். இவள் கண்ட கனவு நனவாயிற்று.

9. லக்னத்திற்கு 7ம் வீடு செவ்வாய் வீடானால் அவள் கணவன் ஸ்திரீலோலன் அன்றியும் வேசிலோலன் என்பது விதி. ஆண்டாளுக்கும் இவ்விதம் அமைந்துள்ளது. ஆண்டாளின் அழகிய மணவாளனாகிய கண்ணபிரான் உலகமறிந்த ஸ்திரிலோலன். அன்றியும் சைலேந்திரி போன்ற தாசி வீட்டிற்கும் விஜயம் செய்த பெருமையும் பெற்றவன்.

10. கேந்திர கோணாதிபதிகள் தசம கேந்திரம் பெற்றால் பல வழிகளிலும் புகழ், பொருள், கீர்த்தி பெற்று உலகம் உள்ள அளவும் அவர் பெயர் பிரகாசிக்கும் என்பது விதி. ஆண்டாளுக்கு 10ல் அவ்வித அமைப்பு அமைந்துள்ளதால்தான் உலகம் இன்றும் எனறும் அவரைக் கொண்டாடும்.

11. பத்து பதினொன்றுக்குடைய சூர்யன் சந்திரன் பரிவர்த்தனை பெற்று பூமி திரவ்ய யோகம் அடைவதால் இவ்வன்னை பூமாதேவியின் அம்சமே எனபது புலனாகிறது.

12. பொதுவாக ஜாதகத்தில் கவர்ச்சிகாரகனை சந்திரனும், காதலைக் குறிக்கும் சுக்கிரனும், கலைக்குரிய புதனும் வலுப்பெற்றால் காதல் கைகூடி வெற்றியடையும், ஆண்டாள் ஜாதகத்தில் சந்திரன் பரிவர்த்தனையால் பலமடைகிறார். ஏனைய சுக்ரன், புதன் கேந்திரமேறி வலுப்பெறுகின்றார்கள். எனவே திருமாலின்மீது இவ்வம்மை கொண்ட காதல் இனியதொரு காவியமாகக் கை கூடியது.

ஸ்ரீ நாதயோகம், பூமி த்ரவ்ய யோகம் போன்ற பல்வகை யோகங்களைப் பெற்றிருக்கும் ஸ்ரீ ஆண்டாள் ஜாதகத்தைப் பூஜையில் வைத்துப் பூஜிப்பவர்கள் அஷ்டைச்வர்யங்களையும் பெறுவதோடு அஷ்டாக்ஷரத்தின் உட்பொருளான ஸ்ரீமந் நாராயணனின் அளப்பரும கருணையினையும் அடைவார்கள் என்பது திண்ணம்.

'பைங்கமலக் கண் தெரியல் பட்டர்பிரான்' கோதை என்னும், பெரியாழ்வார் அடைந்த இப்பெரும் செல்லப் பெருமாட்டியின் தெய்வத் திருஅவதாரத்தால் தண் தமிழும், வையலரும், தமிழ்நாடும் ஒரு படி உயர்ந்தது என்றால் மிகையாகாது.

''திருவாடிப் பூரத்துச் செகத்துதித்
தாள் வாழியே!
திருப்பாவை முப்பதூஉம் செப்பி
னாள் வாழியே!
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்
பிள்ளை வாழியே!
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னா
னாள் வாழியே!
ஒரு நூற்று நாற்பத்து மூன்றுரைத்
தாள் வாழியே!
உயர் அரங்கர்க்கே கண்ணி உகந்
தளித்தாள் வாழியே!
மருவாரும் திருமல்லி வளநாடி
வாழியே!
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்
பதங்கள் வாழியே!''




ஓம்

நித்யஸூரி மஹான்

# ஸ்ரீசுகந்த தூப தீர்த்தார்யர்

திரு. கே. ஆர். கிருஷ்ணமாச்சாரி

**1609-ம்** ஆண்டு. தஞ்சையில் அச்சுதப்ப நாயக்கரின் அரசாட்சி நடைபெற்றுக் கொண்டிருந்த காலம். வான் பொய்த்து மழையின்றி மக்கள் வாடினர். பயிர்கள் காய்ந்தன. கொடிய பஞ்சம் மக்களை வாட்டியது. மக்கள் மன்னரிடம் முறையிட்டனர். மன்னரும் மக்களும் ஆண்டவரிடம் ஸ்ரீரங்கத்தில் பள்ளி கொண்ட பெருமாளை வேண்டினர். மக்களின் பிரார்த்தனை ஒரேகுரலாக இருந்தது. ஏனோ இறைவனின் மனம் இரங்கவில்லை. அதற்கும் அவன் ஒரு காரணம் வைத்திருந்தான். ஆம். தனி பக்தன் ஒருவன் பெருமையை உலகறியச் செய்யத் திட்டமிட்டான் அவன்.

அரசர் அச்சுதப்ப நாயக்கரின் மந்திரியாக அப்போது இருந்தவர் கோவிந்த தீட்சிதர் ஆவார். நிலைமையை நன்கு உணர்ந்தார். மக்கள் நலம் பெற வழி தேடினார். விரைந்தார் ஸ்ரீரங்கத்திற்கு. பெருமாளைப் பிரார்த்தித்த போது அங்கு ஸ்ரீரங்கநாதர் திருச்சந்நதியில் சதாசர்வகாலமும் பகவானை துதித்து

(28-ம் பக்கம் பார்க்க)

# ஜீவாத்மாவும் பரமாத்மாவும்

மாபெரும் சூரிய மண்டலம் எட்டு லக்ஷத்து அறுபத்து நான்காயிரம் மைல்கள் குறுக்களவு கொண்டது என்றும், இந்த சூரியன் சுமார் ஐயாயிரம் கோடி வருஷங்களாகத் தன்னைத் தானே எரித்துக்கொண்டு சக்தி மயமாக ஒளி விடுகிறது என்றும் விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். சூரிய மண்டலமும் அதனைச் சுற்றி வருகின்ற ஒன்பது கிரகங்களும் நியதி தவறாமல் இயங்குவதும், இந்த பூமண்டலத்தில் ஜீவராசிகள் பிறந்து வளர்ந்து மடிவதும் பலகோடிமடங்கு பெரிய விண்மீன்கள், விண்வெளியில் பலகோடி மைல்கள் விரிந்து பரவி, மேலும் மேலும் ஒன்றிடமிருந்து ஒன்று விலகிப் போய்க் கொண்டிருக்கின்றன என்பதும் நம்மை வியப்பிலாழ்த்திக்கொண்டிருக்கின்றன. மனித சக்திகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட ஒரு மாபெரும் இயங்கு சக்தி இப்படிப்பட்ட மாபெரும் நிகழ்ச்சிகளைப பல்லாண்டு காலமாய் நிகழ்த்தி வருகிறது என்பது யாவரும் ஒப்புக்கொள்ளக்கூடிய விஷயம். இது இவ்வாறாயின் இந்த மாபெரும் தொடர் இயக்கத்திற்கு ஏதோ ஒரு முடிவும் இருந்தாகவேண்டும. அதாவது ஏமதா 'ஒரு முழு முதற் பயன்' இருந்தாகவேண்டும் என்கிற முடிவுக்கு வர வேண்டியவர்களாகிறோம். ஆகவே இந்த மாபெரும் இயக்கத்தின் ஓர் அங்கமாக இருக்கிற நம் வாழ்க்கையின்,

**'பூரம்' சத்தியமூர்த்தி**

'முழு முதற் பயன்' (absolute purpose) யாதாயிருக்கக்கூடும் என்று சிந்திப்பதும் நியாயமானதல்லவா?... ........



இந்த உலகில் நாம் பிறக்கும் போதே பலருக்குப் பலவிதமாய்க் கடன் பட்டு விடுகிறோம் என்பதும், இதனால் நாம ஆற்றவேண்டிய கடமைகளும் நம்முடனேயே பிறந்துவிடுகின்றன எனபதும் நாமெல்லாம் உணரவேண்டிய ஒன்று. தாய் தந்தை இருவருக்கும் நாம் ஆற்றவேண்டிப கடமைகள் அதன் பிறகு நம்முடைய அஞ்ஞான இருளகற்றி நம் மனத்தில் ஞான விளக்கேற்றிவைக்கும் நம் ஆசாரியனுக்கு ஆற்ற வேண்டிய கடமைகள் இப்படி இப்பிறவியில் பிறவிக்கடன்கள் ஏராளமாக உள்ளன. துன்பக் கலப்பில்லாத உலக போகங்களே இல்லை என்பதை நாம் உணர்வது மிக அவசியமானது. எப்படிப்பட்ட வசதியான வாழ்க்கையிலும் பசி, பிணி, மூப்பு, சாக்காடு என்கிற நால்வகைத் துன்பங்கள் நிச்சயம் உண்டு. அதனால்தான் இந்தத் துயரைப் 'பிறவிப் பெருந்துயர்' எனறும, இந்த மனித வாழ்க்கையைப் 'பிறவிப் பெருங்கடல்' என்றும் பெரியோர்கள் பேசுவார்கள், நாம் முந்தைய பிறவிகளில் செய்த பாவஙகளை, இப்பிறவியில் நீக்குவதோடு, கடமைகள் தவறாமல் நிறைவேறறிப் புண்ணியங்களைச் சேர்த்து, இனிப் பிறவித் துயர் இல்லாமல், துன்பக் கலப்பில்லாத அந்த மாறாத இன்பமாகிற எம்பெருமானிடம் இணைந்து விடுவதே இந்த வாழ்க்கையின் முழுமுதற் பயன் என்று நாம் கொள்ளவேண்டும்.

இந்த சூரியமண்டலம், மறறும் கோடானுகோடி விண்மீன்கள் இவைகளை அநாதி காலநதொட்டு விரிவடைந்து செயல்படச் செய்கிற அந்த மாபெரும் இயங்கு சக்தியைத் தான் எம்பெருமான், பரமாத்மா, பிரம்மம் என்று வேதங்கள் கூறுகின்றன. அவன் ஆதியும் அந்தமும் இல்லாதவன். அவன் ஸர்வ வல்லமையுள்ளவன்— 'விசுவாதிகன்'. இதற்குக் காரணகர்த்தாவாக அவன் இருப்பதால் அவன் 'விசுவகாரணன்' நம் கண்ணில் தெரிகிற இந்த பூமண்டலங்களாகவே அவன் இருப்பதால் அவன் 'விசுவரூபன்'. இந்த உலகில் நாம் காண்கிற உயிருள்ள உயிரல்லாத எல்லாவற்றிலும் அணுவாய், அணுவில் பரமாணுவாய் மிகப்பெரிய வஸ்துவிலும், மிகச் சிறிய கண்ணுக்குத் தெரியாத வஸ்துவிலும், அங்கிங்கெனாதபடி எல்லாவற்றிலும் உட்புகுந்து வியாபித்து அவன் நிறைந்து நின்று இயங்கிக்கொண்டிருப்பதால் அவன் 'விசுவாந்தர்யாமி' ஆகிறான்.

28 ம் பக்கம் பார்க்க

## தி. தி. தேவஸ்தானத்தாரின்

# எழுத்தாளர் நிதி உதவித்திட்டம்

### இதுவரை வெளிவந்துள்ள நூல்கள் பின்வருமாறு

1. மாத்வசங்கம் —ஹரிதாஸ பஜனை மஞ்சரி
2. டி. லோகிதாஸன் —வேமன்னுவின் வேத வாக்கு.
3. பி. கோபால் —பரமன் அடியார் பத்துப்பேர்
4. சீதாராமன் —ஹனுமன் கதை
5. எம். நாராயணசாமிபிள்ளை —தெய்வீகச்சிந்தனைகள், தனஞ்சயன்,
7. என். சுப்புரெட்டியார் —
வடநாட்டுத் திருப்பதிகள்
சோழநாட்டுத் திருப்பதிகள்
சேரநாட்டுத் திருப்பதிகள் பகுதி (2)
8. ஏ. சீனிவாசன் —கடவுள் வரலாறு
9. என். கிருபானந்தன்–சிறையிருந்த செல்வி
10. ஏ. சீனுவாசன் —திருவரங்க திருநூல்
11. எஸ். சௌமிய நாராயணன் —ஆண்டாள் அவதாரமும், அருட்செயலும்
11. ஆர். ஷண்முகம்பிள்ளை —திருவேங்கட மஹாத்மியம்
12. கு. தாமோதரன் –திருவாய்மொழித்திறன்
13. கே. வரதாச்சாரி —சுதாரஸ மஞ்சரி (1)
,, (2)
14. பெரிய நாயகம் —இந்துமதம்
15. வி. ரங்கசுவாமி ஐயங்கார் –வேங்கடேஸ்வரரும் வேதாந்ததேசிகரும்
16. ஆர். கண்ணன் சுவாமி–யக்ஷ பிரஸன்னம்
17. சி.என். கிருஷ்ணமூர்த்தி–திருமலையாற்றுப்படை
18. எஸ். கிருஷ்ணசுவாமிஐயங்கார் – ஸ்ரீவைகானஸ சித்தாந்த ஸாரம்
19. பண்ணைக்கோமகன் —ஈசனடியார் பததுப்போ
20. நஜன் —ஸ்ரீ வைஷ்ணவ ஆசார்யர் வைபவம்
ராமன பேசுகிறுன், குண்டலினி சக்தி
21. பி. என். கிருஷ்ணமாச்சாரியார் – பரமத பங்கம்
22. காளி ராஜன் —இறைவழிபாடு
23. திரு. ஆகுரி ராமானுஜதாஸன-பேசும் தெய்வம்
24. மாருதிதாஸன் —இந்து சமயக்கருத்துக்கள்
25. கே. வெங்கடசாமி ரெட்டியார் –கலைமகள பிள்ளைத்தமிழ்
26. எம். ஏ. வெங்கடகிருஷ்ணன் —தொண்டைநாட்டுத் திருப்பதிகள்
27. பி. கே. மூர்த்தி — ஸ்ரீ தியாகராஜசுவாமிகள் சரித்திரம்.
28. பொன்னை. கோபால் — ஈசனின் எட்டு அடியார்கள்
29. ஆர். இளங்கோதாஸன் — திருவடிமாலை
30. எஸ். நடராஜன் —துவைத ஆசார்யர்கள் வைபவம்
31. புலவர். எம். வைத்தியலிங்கம் —சேரமான் நாயன்மார் பாடல்கள்.
32. திருமதி. ராதா ராமனுஜன் —ஸ்ரீ பத்மாவதி ஸ்ரீநிவாஸ கல்யாணம்
33. வி. ரங்கசுவாமி ஐயங்கார் — ஸ்ரீராமாயண வாக்ய ரத்னங்கள்
34. ஆர். கோபாலன் – அன்னைத் திருச்சதகம்.
35 ஆர். மாணிக்க வாசகம் – திருமந்திர ஆராய்ச்சி.
36. ஏ ராமலிங்கசுவாமி — பேசும் தெய்வம்.
37. ஆர். பார்த்தசாரதி ஐயங்கார் – திவ்ய தேச கீர்த்தனைகள்.
38. மாருதி தாஸன் — ஆழ்வார்கள் வரலாறு.
39. என். ஆர். சம்பத் — நாரத பக்தி சூத்ரம்.
40. ஏ. சுதாகர்—ஆழ்வார்-அன்னமய்யா பாடல்களில் கண்ணன் விளையாட்டுக்கள்.
41. டி. ராஜ்மோகன்ராஜ்—மார்கழித் திங்கள்.
42. கே. ஆர். கிருஷ்ணமாச்சாரி—நாயகி நவின்ற நல்லுரைகள்.
43. எஸ். நடராஜன்—நாதோபாஸனை.
44. என். முத்துக்கிருஷ்ணன் — பக்திப்பாடல்கள்.
45. கே. எஸ். மணவாளன் — வேதாந்ததேசிகர் —மணவாள மாமுனிகள்
46. கே. ஆர். கிருஷ்ணமூர்த்தி — உறையூர்
47. பண்ணைக் கோமகன் — குன்றக்குமரன்
48. எம். நாராயண வேலுபிள்ளை —
    1. மகாபாரதக் காட்சிகள்
    2. இராமாவதாரம்
49. டி. பால்வண்ணுா — தெய்வீக உண்மைகள்
50. என். சுப்பு ரெட்டியார் — சைவ சமய விளக்கு
51. டி. எம். சௌந்தரராஜன் — வாழ்வும் வழிபாடும்
52. அமமன் சத்தியநாதன் — பாரதியும் சக்தி வழிபாடும்
53. நாகர் கோயில் கிருஷ்ணன் — தெய்வீக பண்டிகைகளும் தியானங்களும்
54. ஏ. நடராஜன — உண்மையின உயர்வு
55 கே. நடராஜதாசன் — சித்தி அருளும் சகதி வழிபாடு
56. வி. ஆர். ரஙகாச்சாரி — ஸ்ரீமத் ரகஸ்ய த்ரயசாரம்
57. அ. ஸ்ரீநிவாசன் — வைணவ தத்துவ ஞான அடிப்படைகள்
58. டி. எஸ். ராஜகோபாலன் — கீத கோவிந்தம்
59. பொன். பாஸ்கர மார்த்தாண்டன் — வாழவைக்கும் வைகுண்டங்கள்
60. ஏ. சுதர்ஸனன் — ஸ்ரீ சுதர்ஸன வைபவம்

(25-ம் பக்கத் தொடர்ச்சி)

வந்த மஹான் ஸ்ரீ தூப தீர்த்தார்ய ஸ்வாமிகளைச் சந்தித்தார். வறட்சிநிலையை எடுத்துக்கூறி தஞ்சைக்கு எழுந்தருளி அருள் புரியுமாறு பிரார்த்தித்தார். தீட்சிதரின் வேண்டுகோளை ஏற்று தஞ்சைக்குச் சுவாமிகள் எழுந்தருளினர். மக்கள் நலம் பெற வேண்டி 'ததிகு பொவ்ஸ் பொடி தந்து ஸொங்கோ விக்காட் ரெங்கா' எனும் வரகவியால் ஸ்ரீரங்க நாதரை மனம்உருகி பிரார்த்தித்தார். அடை மழை பெய்தது. ஏரி குளங்கள் நிரம்பி வழிந்தன. பயிர்கள் செழித்தன. மக்கள் பிணி நீங்கியது. மக்கள் அனைவரும் இவரைத் தொழுதனர். மன்னரும் அடி பணிந்தார். காணிக்கையாகப் பொன்னையும் பொருளையும் அளிக்க முன்வந்தார். இறையருளே பெரிதென எண்ணும் இவர் பொருளை விரும்புவாரா என்ன? ஏற்க மறுத்துவிட்டார். ஆனால் ஒரு பேராசையை வெளியிட்டார். ஆம். தினமும் காலை ஸ்ரீரங்கநாதருக்குச் செய்யப்படும் முதல் பூஜைக்கு பின் பக்தர்களுக்குவழங்கப்படும் தீர்த்தப்பிரஸாதம் முதன் முதலில் தனக்கு அளிக்க ஏற்பாடு செய்யுமாறு கேட்டுக்கொண்டார். என்னே இவரது பக்தி. பகவான் மீது கொள்ளும் தூயபக்தி எத்தகைய அரிய செயலையும் செய்விக்கும் என்பது இதிலிருந்து அறியலாம்.

தூப தீர்த்தார்யர் எனும் இப்பெயர் காரணப் பெயராகும். இவர் திருவரங்கன் சந்நதியில் இறைவனுக்குச் சாம்பிராணி புகையை சமர்ப்பித்தவராய் சாம்பிராணி கிண்ணத்துடன் காட்சியளித்தார். அதுவே 'தூப' எனும் முதல் அடைமொழியாயிற்று. 'தீர்த்த' எனும ஸம்ஸ்க்ருத பதத்திற்கு சாஸ்திரம், மஹான் என்ற அர்த்தங்களும் உள்ளன. இவர் சாஸ்திரங்களை அறிந்தவராகவும் ஸௌராஷ்டிர ஸாஹித்யங்களை இயற்றியவராகவும் மேலும் இறைவனைப் பாடி மழையை (தீர்த்தம்) பெய்வித்தவராயும் தீர்த்தப் பிரியராயும் விளங்கியதால் தீர்த்தார்யர் என மக்களால் அழைக்கப்பட்டார். 'தூப தீர்த்தார்யர்' எனும் இவரது பெயருக்கு இதுவே காரணமாகும். இவரது நினைவாக ஸ்ரீரங்கம் ஸ்ரீரங்கநாதரின் திருவுருவத்திற்குப் பின்புறம் இவரது திருவுருவம் சிலா மூர்த்தியாக காணப்படுகின்றது. ❖

---

(26—ம் பக்கத் தொடர்ச்சி)

எனவே நம் உடலிலும், உயிரிலும் நமக்குள்ளும் அந்த எம்பெருமான் 'அந்தர்யாமியாய் இருக்கிறான்' என்பது பெரியோர் வாக்கு. இந்த சரீரத்திற்குள் இயங்குகிற அந்த 'அந்தர்யாமி' யைத்தான் ஆத்மா, ஜீவன் ஜீவாத்மா, சேதனன் என்று சொல்கிறார்கள்.

எம்பெருமானாகிற பரமாத்மாவின் தன்மைகளை, ஜீவாத்மாக்களின் தன்மைகளையும், பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள தொடர்புகளையும் பற்றி வேதங்கள், உபநிஷதங்கள், பிரம்மஸூத்ரம், இதிகாச புராணங்கள், ஆழ்வார் பாடிய பிரபந்தங்கள் இவைகளிலிருந்து ஸாரமாய் எடுத்து நம்முடைய ஆசார்யர்கள் நமக்கு அமுதமாகத் தந்திருக்கிறார்கள்.

ஜீவாத்மாவாகிற நாம் பிறவிப்பெருந்துயர் நீங்கிப் பரமாத்வாகிற எம்பெருமாளின் திருவடிகளில் அவனோடு இணைந்து எப்போதும் எக்காலமும் மாறாத துன்பக்கலப்பில்லாத அந்தப் பரமானந்த நிலையை அடைவதற்கு மிக எளிமையான வழியை பரம தயாசிந்துவான நம் எம்பெருமானார் 'விசிஷ்டாத்வைதம்' என்கிற தன் சித்தாந்தத்தில் நிருபணம் பண்ணியிருக்கிறார்.

கருணைக் கடலாய், சரணாகத வத்ஸலனாய் விளங்குகிற அந்த எம்பெருமானை நாம் அடைவதற்கு ஒரே ஒரு சுலபமான வழி அவனைச் சரணாகதி அடைவதுதான் என்பதை ஆழ்வார்களின் 'நெறியும் அவனே! வாசலும் அவனே!'என்கிறகருத்தைக்கொண்ட 'நெறிவாசல் தானேயாய்' என்கிற திருவாக்கினைச் சுட்டிக்காட்டி நிருபணம் செய்கிறார். ஜீவாத்மாக்கள் அந்தப் பரமாத்மாவைச் சார்ந்தே இருப்பதால் ஜீவாத்மாக்களை உடல் என்றால் அந்தப் பரமாத்மா உயிர் ஆகிறான. ஆகவே அந்தப் பரமாத்மாவையே சார்ந்து அவனைச் சரணாகதி அடைவது ஒன்றே சிறந்த வழி என்பது விசிஷ்டாத்வைதம்.

எம்பெருமானைப் பற்றி நாம் தெரிந்துகொள்வதற்கும், நாம் இப்பிறவியிலோ அல்லது முற்பிறவிகளிலோ, அறிந்தும் அறியாமலும் நாம் செய்கின்ற பாவங்களைத் தாம் ஏற்றுக் கொண்டு அவற்றைத் 'தீயினில் தூசாய்'ப் பொசுக்கி நம்மை உஜ்ஜீவிக்கப்பண்ணுகிற ஆசாரியன் முதலில் நம்மால் சரணடையப்படவேண்டிய சரண்யராகிறார். இந்த ஆசார்ய சரணாகதியே நம்மை எம்பெருமானோடு சேர்த்து வைக்கிறது என்பதை நாம் உணரவேண்டும்.

இதைத்தான் ஸ்ரீமத் மணவாள மாமுனிகள் தம்முடைய 'யதிராஜ விம்சதி' யின் கடைசியில் இவ்விதம் பிரார்த்தித்துக்கொள்கிறார்.

"கருணைக்கடலான எம்பெருமானாரே! அடியேன் தத்வ ஹித புருஷார்த்தங்கள் பற்றிய ஞானமில்லாதவன். ஆத்ம குணங்களுமில்லாதவன். தேவரீரை விட்டு வேறு புகல் இல்லாதவன்! இவற்றைத் திருவுள்ளம் பற்றி அடியேனுடைய சரணாகதியை அங்கீகரிதத்துத் தலைக்காட்டியருள வேணும்'' — இதை நாமும் அநுஸந்தித்து உய்வோமாக! ○

# ★ ★ குகப் பெருமாள் ★ ★

திருமாலுக்கு ஆயிரம் நாமங்கள் உண்டு: இதனை சகஸ்ரநாமம் என்று வடமொழியில் கூறுவர். இங்கு ஆயிரம் என்பதற்கு அனந்தம் (எண்ணிலடங்காதது) என்பது பொருள். அதன் சுருக்கமே நூற்றுஎட்டு நாமங்கள். (அஷ்டோத்திரம்) இது போலவே திருமால் திருத்தலங்களும் அநேகம். அதன் சுருக்கமே நூற்று எட்டுத் திருப்பதிகளாகும். இந்த நூற்று எட்டுத் திருத்தலங்களே ஆழ்வார்கள் பாடல் பெற்றவை.

திருமால் கோயில்களைப் பெருமாள் கோயிலென்றும், அங்குள்ள அர்ச்சாமூர்த்தியைப் பெருமாள் என்றும் கூறுவர் பிறர். வைணவர்கள் மட்டும் அவ்வாறு கூறுவதில்லை. ஆழ்வார்களால் பாடப்பட்ட திருக்கோயில் உள்ள ஊரை, திவ்யதேசம் என்றும், அங்கு எழுந்தருளுயிருக்கும் பரம்பொருளை எம்பெருமான் என்றுமே கூறுவர். திருவேங்கடத்தெம்பெருமான், திருக்கண்ணபுரத்தெம்பெருமான், திருமெய்யத்தெம்பெருமான் என்று கூறுவது அவர்கள் மரபு

வைணவப் பேச்சுவழக்கில் திரண்ட பொருள் பொதிந்திருக்கும். செறிந்த கருத்துக்கள் மலிந்து கிடக்கும். பெரும்பாலும் தூய தமிழ்ச் சொற்களையே அவர்கள் பேசுவார்கள். பெருமாள் என்ற சொல்லுக்கு அவர்கள் கூறும்பொருளே வேறு. ஆலயங்களில் எழுந்தருளியிருக்கும் திருமாலை 'பெருமாள்' என்று அவர்கள் கூறுவதில்லை. சக்கரவர்த்தித் திருமகனுகிய இராமபிரான் ஒருவனையே அவர்கள் 'பெருமாள்' என்பர். உதாரணமாக, "பெருமாள் பொன்முடி சூடக்காடு பூமுடி சூடிற்று" என்பது காண்க. இராமன் பொன்முடி புனைந்த போது, வனத்திலுள்ள மரம், செடி, கொடிகள் பூத்துக் குலுங்கி நின்றன என்பது பொருள். எனவே வைணவப் பெருமக்கள் 'பெருமாள்' என்ற சொல்லால் இராமனையே குறிப்பிடுவது விளங்கும்.



பெருமாள், பெரிய பெருமாள், இளையபெருமாள், குகப்பெருமாள் என்பது வைணவப் பேச்சு வழக்கு. இராமனுக்கு இளையவர்களான பரதனையோ, சத்துருக்கினனையோ, பரதப் பெருமாள், சத்துருக்கினப்பெருமாள் என்று கூறுவதில்லை. பரதாழ்வான், சத்துருக்கின ஆழ்வான் என்றுதான் அவர்கள் கூறுவர். இங்கு அவர்கள் பெருமாள் என்று கூறுவதிலுள்ள பொருளைச் சற்று ஆராய்வோம்.

திரு ஆர். தேவராஜய்யங்கார்
கருப்பட்டி.

வைணவர்கள் 'பெருமாள்' என்று இராமனை மட்டுமே கூறுவர். மற்ற மூர்த்திகளைப் பெருமாள் என்று அவர்கள் கூறுவதில்லையோவெனில், உண்டு. பெருமாள் என்று இராமனையும், பெருமாள் என்ற சொல்லைப் பின் இணைத்துப் பெரிய பெருமாள், இளைய பெருமாள், குகப்பெருமாள் என்றுமே வைணவர்கள் கூறுவது வழக்கம். இவ்வாறு அவர்கள் கூறுவது மிகவும் கருத்தாழங்கொண்டது. பெருமாளால் ஆராதிக்கப்பட்டவரான திருவரங்கநாதனைப் பெரிய பெருமாள் என்றும், அல்லும் பகலும் இராமனைப் பிரியாது பணிவிடை செய்தவரும் இராமனுக்கு இளையவருமாகிய இலட்சுமணனை

இளையபெருமாள் என்றும், இராமனால் அன்பு பாராட்டப்பட்ட குகனை குகப்பெருமாள் என்றும் சொல்வது அவர்கள் மரபு.

திருவரங்கனைப் பெரிய பெருமாள் என்பதும், இராமபிரானின் தம்பி இளையபெருமாள் என்பதும் பொருத்தமுடையதே. காட்டில் வாழும் வேடர் தலைவனைக் குகப்பெருமாள் என்பது பொருத்தமுடையதா? என்பதே இங்கு எழும் கேள்வியாகும். இதுபற்றிச் சற்று ஆராய்வோம்.

சிருங்கிபேரம் என்பது ஒரு சிறிய நகரம். அது கங்கையாற்றின் கரையிலுள்ளது. அந்நகரத்தின் தலைவன் குகன். வேடர் குலத்திலுதித்தவன். அவனிடம் ஓடங்கள் ஆயிரம் உண்டு. கங்கை நதியைக் கடப்பவர்கள் அவனது படகில்தான் பயணம் செய்வர். சக்கரவர்த்தித் திருமகன் கங்கைக் கரையில் வந்து தங்கியிருக்கிறான் என்பதைக் குகன் கேள்வியுற்றான். தான் தேடிப் போய் அடைய வேண்டியவன், தன்னைத் தேடி வந்தது போன்ற உணர்ச்சி அவன் உள்ளத்தில் பொங்கி எழுந்தது. அன்பு பெருக ஆசையோடு அவன் இராமனைக் காண வருகிறான்.

திருமால் இராமனாக அவதரித்தான்.

"சென்றால் குடையாம் இருந்தால்சிங் காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள் —என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூமபட்டாம் புல்கும்
அணையாம் திருமாற் கரவு."

என்ற ஆழ்வார் அமுதவாக்கின்படி அல்லும், பகலும், அனவரதமும் திருமாலை விட்டு அகலாதவன் அரவரசன். அவன் திருமாலின் உகப்பே தனக்குப் பெரும் பேறாகக் கொள்பவன். திருமால் பெருமாளாக (இராமனாக) அவதரித்தபோது அனந்தனும் இளைய பெருமாளாக அவதரித்தான். இராமனுக்கு இடைவிடாது ஏவல்செய்யவே அவன் இளவலாக அவதரித்தான்.

அனந்தனைப் போன்றே "அகலகில்லேன் இறையும் என்று" திருமாலை விட்டு ஒரு நொடிப் பொழுதும் பிரியாத திருமகளும் சீதாப்பிராட்டியாக அவதரித்தாள். இருவருமே பெருமாளை விட்டுச் சில மாதங்கள் பிரிய நேரிட்டது. இலட்சுமணனோ இமைப்பொழுதும் இராமனை விட்டுப் பிரியவில்லை. எக்காலத்தும், எவ்விடத்தும், எந்தச் சூழ்நிலையிலும் எல்லாக் கைங்கரியத்தையும் செய்பவன் அவன். கைங்கரியத்தின் முழுப்பயனையும் அனுபவித்தவன் இலட்சுமணன்.

ஒரு சமயம் இலட்சுமணன் கைங்கரியத்திற்கும் தடை ஏற்பட்டதுண்டு. இராமனை விட்டு பிராட்டியை இராவணன் என்ற அரக்கன் பிரித்தான். அதேபோல இலக்குவனையும் அஜோமுகி என்ற அரக்கி பிரித்துத் தூக்கிச் சென்றுவிட்டாள். பிராட்டியின் பிரிவைத் தாங்கிக் கொண்ட பெருமாளால் இலக்குவனின் பிரிவைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. இவ்வாறு சற்றுநேரம் இராமன் இளவலைப் பிரிந்து வருந்தியபோது தனக்குத் தானே கூறியதாக,

"என்னைத் தரும் எந்தையை என்னையரைப்
பொன்னைப பொருகின் றபொலங் குழையாள்
தன்னைப் பிரிவேன் உளதாய துதான்
உன்னைப் பிரியா தவுயிர்ப் பலவோ?

என்றதனாலும், பின்னர் இலட்சுமணன் அஜோமுகியை மூக்கரிந்து அவளை அங்க பங்கப்படுத்திவிட்டு அவளது பிடியிலிருந்து விடுபட்டு இராமனை அடைந்தபோது இராமன் இலக்குவனை நோக்கி, தந்தை தாயர் மற்றைத் தம்பியர் முதலாக

"பிரிபவர் யாவரும பிரிக பேரிடர்
வருவன யாவையும் வருக வார்கழற்
பெருவலி வீரநிற் றீரி னல்லது
பருவர லென்வயிற் பற்றற் பாலதோ'

என்று கூறியதாகவுள்ள கம்பர் பாடல் இங்குக் கருதத்தக்கது.

இவ்வாறு பகவானின் பரம பிரீதிக்குப் பாத்திரமான இலட்சுமணன் துணையோடு இராமனைக் காண வருகிறான். அங்கு இராமன் பிராட்டியோடு வீற்றிருக்கிறான். குகன் உள்ளே நுழைந்தும் பிராட்டி அவனைக் கடைக்கணிக்கிறாள். இவ்வாறு திவ்ய தம்பதிகளின் சந்நிதியிலே



கபாலீசுவரர் கோயில், மயிலாப்பூர் - சென்னை.
திரு. வி. முத்துராமன் - கோவை.

சென்று தண்டனிட்டு நிற்கிறான் குகன்.

முதன் முதல் பரம பாகவதனை இலட்சுமணனின் புருஷகாரமும், இரண்டாவதாக பிராட்டியின் கடாக்ஷமும் குகன் பெற்றான். அதன் பலனாகவே பிரானின் பேரருளும் அவனுக்குக் கிடைத்தது.

ஒருவருக்குத் தெய்வத்தின் திருவருள் கிடைக்கவேண்டுமேயானால் புருஷகாரம் வேண்டும். அதாவது, ஒருவருக்கு மற்றொருவரை அறிமுகப் படுத்திப் பரிந்துரை செய்வது. இது வைணவர்களின் அசைக்க முடியாத நம்பிக்கை. இதையே குகன் பின்பற்றினான். அவன் இலட்சுமணனை முன்னிட்டுக் கொண்டு இராமனைக் காண்கிறான். இலட்சுமணனும் குகனை இராமனுக்கு அறிமுகப்படுத்துகிறான். குகனை இராமனும் குளிர நோக்கினான்.

“தர்மாத்வான இராமபிரான் அன்புக்குரியவனும் வேடர்களுக்குத் தலைவனுமான குகனையடைந்து “மாழைமான் மடநோக்கி உன் தோழி உம்பி எம்பி” என்கிறபடியே பிராட்டியை இளையபெருமாளையும் முன்னிட்டு “உகந்த தோழன் நீ” என்று அங்கீகரிக்கப்பெற்ற குகப்பெருமாள்” என்று மணவாளமாமுனிகள் ‘ஆசார்ய ஹ்ருதயத்தின்’ வியாக்யானத்தில் கூறுவது இங்குக் கருதத்தக்கது.

வேந்தர் தலைவன் இராமன், வேடர் தலைவன் குகன்: பெருஞ்செல்வன் இராகவன். பரம ஏழை குகன்; உயிர்களைக் காக்கும் உத்தமன் இராமன்: உயிர்க்கொலை செய்து வாழ்பவன் குகன்; கருணையே வடிவானவன் காகுத்தன்; கண்டவர் அனைவரும் கலங்கும்படியானதோற்றமுடையவன் குகன். இக்ஷ்வாகு குலத்திலகன் இராமன். இழி தொழிலும், பழி குலமும் உடையவன் குகன்; இருவருக்கும் இடையே எவ்வளவு ஏற்றத்தாழ்வு? இவ்வாறு இருந்தும் கடல் மடை திறந்து கரை புரண்டு ஓடி வருவது போலக் காகுத்தனின் கருணை வெள்ளம் குகனிடத்தில் வந்து புகுந்ததற்கு இலட்சுமணன் புருஷகாரமும், பிராட்டியின் அருளுமே காரணம். இந்தப் பேருண்மையைத் திருமங்கையாழ்வார்,

“ஏழை யேதலன் கீழ்மகனென்னா
திரங்கி மற்றவர்க்கின்னருள் சுரந்து
மாழைமான் மடநோக்கி யுன்தோழி
உம்பி எம்பியென்றொழிந்திலை உகந்து
தோழன் நீயெனக்கிங்கொழியென்ற
சொற்கள் வந்து அடியேன் மனத்திருந்திட
ஆழிவண்ணா நின்னடியிணையடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத் தம்மானே”

என்ற தேனினுமினிய பாசுரத்தினால் உலகுக்கு வெளியிட்டருளினார்.

இராமன் குகனை ஏழை என்று ஏறிட்டுப் பாராமலிருக்கலாம், ஏதலன் என்று புறக்கணிக்கலாம்; கீழ்மகன் என்று முகங்காட்டாதிருக்கலாம்: இத்தனையும் ஒருங்கே அடையப்பெற்ற ஒருவனிடத்தில் இரக்கம் காட்டினான் என்றால் காகுத்தன் கருணைதான் என்னே! என்பது ஆழ்வார் பாசுரத்தின் ஆழ்பொருளாம்.

ஆழ்வார், இப்பாசுரத்தில் ஏழை, ஏதலன், கீழ்மகன் என்று மூன்று சொற்களைஅடுக்கியிருக்கிறார். இதனை நோக்குமிடத்து, ஒருவன் பொருளற்றவனாக இருக்கலாம், ஏதலனாக இருக்கக்கூடாது. ஏதலனாக இருப்பவரினும் கீழ்மகனாக இருப்பது மிகவும் தாழ்வாகும். இவை முறையே ஒன்றினும் ஒன்று இழிவானது. ஏழையைச் செல்வந்தர்கள் ஏதலன் போலக் கருதுவர். அவரது அயலான் ஒருவனைப் போல் அவனை நினைப்பர். ஏன்? (ஏதலன் என்பதற்கு கொலைகாரன் என்ற ஒரு பொருளும்உண்டு) அவனைக் கொலைகாரனைப் போலவே பார்ப்பார்கள். இவையனைத்துமே புடையவன் குகன்.

இவ்வாறு குலத்திலும், செயலிலும், குணத்திலும் குறைவுள்ள குகன்; யான் ஏழை என்றோ, ஏதலன் என்றோ; கீழ்மகன் என்றோ தன் இழிவை வெளியிட்டுக் கூறுவதற்கு முன்னமே அவனிடம் இரக்கம் காட்டி



வயலூர் முருகன் கோயில்
திரு. வி. முத்துராமன், கோவை.

ளுன் என்றல் இராமபிரானின் பெருமைதான் என்ன!

கருணைக் கடலான பிராட்டி குகனைக் கண்டதும பிறந்த வீட்டுத் தோழன் வநததாகப்பாவித்து அவனை நோககினள். இவனை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று பெருமானையும் கடைக் கண்ணல பார்த்தாள் இக் குறிப்பறிந்த பெருமாள், "மாமைமான் மடநோக்கி உன் தோழி" என்றார். உயர்ந்த பண்புடையவர்கள் அடிமைத் தொழில் செய்வாரையும் அண்ணு! அககா! என்பரன்றே? அது போல, ஜானகியைத் தோழியாக்கிய தோடு நிற்கவில்லை இராமன். எப்பொழுது சீதை உனக்குத் தோழியானளோ அப்பொழுதே நானும் உனக்குத் தோழனுகி விட்டேன் என்று தன்னையே அவனுககுரியவனுக்கி விடுகிறனே! இந்தப் பேரருள் இராம காவியத்திலே குகன் ஒருவனுக்குத் தானே கிடைத்தது!

குகன் முதன் முதல் இலட்சுமணனைப் பற்றியே இராமனை அடைந்ததனுல், இலட்சுமணனை குகனுக்குத் தம்பியாக்கி, உனக்குத் தம்பியாகிய இவன் எனக்கும் தம்பியே என்ற கருத்தில் 'உம்பி எம்பி' என்றார். எனவே குகனை தனக்கு அடுத்த சகோதரனுகவே இராமபிரான் கருதினுர் என்பது விளங்கும். இக்கருத்தை "முன்புளமொரு நால்வே முடிவுளதெனவுன்ன, அன்புள வினிநாமோ ரைவர்களுளராஞேம்" என்று இராமன் திருவாக்கிலுலேயே தெளிய வைப்பா கம்பர் பெருமான்.

தன்னேடு கானகத்திற்கு வருவதாகக் கூறிய குகனை நோக்கி இராமன்,

" அன்னவ னுரைகேளா வமலனுமுரை
நேர்வான்
என்னுயி ரனையாய்நீ இளவலுனி
னையானிநி
நனுைத லவனின்கே ணளிர்கட
லிலமெல்லாம்
உன்னுடை யதுநானுன் றெழிலுரி
மையினுள்ளேன "

என்றுகூறுமிடத்திலும், சிறையிருந்த செல்வியாகிய சீதாப்பிராட்டியார் தனக்குத் தானே வருந்திப் புலம்புமிடத்தில்

" ஆழநீர்க் கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக்கு எம்பி யுமபிநீ
தோழன் மங்கை கொழுநதி யென்ற
வாழி நண்பினே உனனி மயங்குவாள்"

என்றும் ஆழ்வார் பாசுரத்தை அடியொற்றி ஏன்? அப்பாசுரத்தின் சொற்களைக்கூட மாற்றுமல் கம்பர் கூறும் அழகு நம் உள்ளத்தை ஈர்க்கின்றது. இவ்வாறு கம்பர் ஆழ்வார் வாக்கில் ஈடுபட்டு ஊறித்திளைத்து உணர்ச்சி பெருகக் கூறுவதைக் காணும் நம் ஒவ்வொருவருக்கும் உள்ளம் குழையுமன்றே?

மேலும் பரதன் கௌசல்யா தேவிக்குக் குகனை அறிமுகப்படுத்துமிடத்தில்: "இன்றுணைவனிராகவனுக் கிலக்குவற்கு மிளயவற்கு மெனக்கும் மூத்தான், குன்றனைய திருநெடுந் தோட் குகனென்பானிந்நின்ற குரிசிலென்றுன்." என்று பரதனே குகன் தனக்கு மூத்தவன் என்று கூறுவதையும்; கௌசல்யா தேவியும்,

" நைவீரலீர் மைந்தீ ரினித்துயா
ருடிறந்து காடு நோக்கி
மெயவீரர் பெயர்நததுவு நலமாயிற்
றுமனறே விலங்கற் றிண்டோள்
கைவீரக் களிறனைய காளையிவன்
றனனேடுங் கலந்து நீவிர்
ஐவீரு மொருவீரா யகலிடத்தை
நெடுங்கால மளித்தி ரெனறுள"

என்று கூறுவதையும் நோக்கின், இராமன தனக்குச சகோதரனுக ஏற்றுக்கொண்ட குகனை, பரதன் தனககு மூத்த சகோதரனுகவும், கௌசல்யை தனககு மகனுகவே கொள்வதும் சகோதர தததுவத்திற்கே ஒரு முடி மணி சூட்டுவது போல அமைகிறது.

மடநோக்கி உன் தோழி, உம்பி எம்பி என்ற சொற்களால் இராம பிரான் குகனைத் தனக்குச் சமமாகக் கொணடான் என்பது தெளிவு. இது பற்றியே இராமனைப "பெருமாள்" என்றும, இராமன் தனக்குச் சமமாகக கருதிய குகனை, குகப்பெருமாள் என்றும், குகனுக்கும் இளைய வனுன இலககுவனை இளைய பெருமாள் என்றும் கூறி மகிழ்வர் வைணவர். எனவே வைணவப பேசசு வழக்கில் எவ்வளவு கருத்தாழம் இருக்கிறது என்பதை உணர்நது நாமும் இன்புறுவோமாக. ○



சூர்யோதயம் - கன்னியாகுமரி,
திரு. கே. ஜெகதீஷ் - திருப்பதி

# திருவேங்கடமலை வரலாற்று மாலை



### திருமலை நம்பிகள் திருநாடு சேர்தல்:

பெரிய திருமலை நம்பிகள முற்கூறியபடியே மிகப் பிரசித்தமான குண கணங்களையுடையவரும தோழப்பரென்ற மறுபெயரைப் பெற்றவருமான தமது (அபிமான) குமாரரான பிள்ளைத் திருமலை நமபிகளோடு கூடி, தமமாசாரியராகிய ஆளவநதார் ஆணையிட்ட-பெருமாள் திருமஞ்சன தீர்த்தங் கொணடு வரும கைங்கரியத்தை ஆதரத்துடன் செய்துகொணடிருநது, சில நாள சென்ற பினபு அககுமாரர் முன்பாகத் தாமும் பரமபதம் சேர்ந்தார.

அப்பெரிய திருமலை நமபிகள் பரமபதம செல்ல விருப்பங் கொணடு தாம் பூஜிககும் வெணணெய்க்காடும பிள்ளையான (வெணணெயைக கையில் கொணடு, அது கிடைதத மகிழ்ச்சியினால கூத்தாடும் பிள்ளையான) ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய கோவிலாழவார் கதவைத் திறந்து திருத்திரையையும நீக்கி அப்பெருமானெதிரில நினறு கொணடு கூப்பிய கையராய் "சாயலொடு மணிமாமை தளர்நதேன நான் இனியுனது வாயலகில இன்னடிசில் வைப்பாரை நாடாயே" (ஒளியுடன கூடிய அழகிய நிறத்தை நான இழந்தேன- (அதாவது இவவுடலை விடும நிலையிலுள்ளேன் எனறபடி) இனி உன் வாயலககுள்ளே இனிய உணவை ஊட்ட வல்லவர்களைத் தேடிககொள்) என்று நமமாழவார் அருளிய திருவாய் மொழிப் (1-4-8) பாட்டை அனுஸந்தானம செய்து கொணடு, "பெருமானே இனிமேல் உனது கோவைப் பழம் போன்ற உதடுகளைக் கொணட திவ்யமான திருவாய் மலரில் உயாநத ப்ரஸாதங் ஸமர்பபிக்குமவர்களைத தேடிககொள என்று சொலலுகற்த உரிய நிலையை அடைநத அடியேன இதோ (இவ்வுடல் நீங்கிச) செல்லுகினறேன்" என்று விணணப்பம் செய்துவிட்டு, திருவேங்கடமுடையானைத் தியானித்து "ஸ்வாமீ, ஆசார்யரான ஆளவநதாரின் நியமனத்தைபொட்டிக தேவரீர் திருமஞ்சனத்திற்காகத் தீாத்தங் கொணடு வரும கைங்கரியத்தை இன்று வரை இயன்ற வரையில் செய்தேன். இனிமேல் அக்கைங்கரியம செய்பவரைத தேடிக்கொள்ளும. தேவரீருடைய உயாநத கருணை கடாக்ஷத்தினல் தேவரீருடைய நிதய விபூதியை (பரம பதத்தை) அடியேன அடையுமாறு அங்கீகரிகக வேணும்" என்று வேணடிககொணடு, கோவிலில பெருமானுக்குத் தொணடு புரியும் அனைவரையும் மற்ற பகவத் பகதரையும் அழைததுத் தாம ஏதாவது தவறு செயதிருநதால் அவற்றைப் பொறுககும்படிப பிராாத்தித்து, த்வய மநதிரத்தை யனுஸநதிப்பதிலேயே ஊன்றியவராய், பரமபதமென்னும் மேலுலகிற்குச் செலலவுதவும் அர்ச்சிராதி லோகஙகளென்னும் வழியாகிய உயர்நத ஏணியிலுள்ள படி வரிசைகளில் ஏறுவதற்த முககிய காரணமான ஆளவந்தாருடைய திருவடித தாமரையிணையை நினைத்துக கொணடே நித்ய விபூதியில புகுநதருளினர்.

### தணணீரமுது எதிர்கொள்ளும் உத்ஸவம்:

இவ்வாறு திருமலை நம்பிகளின் அவதாரம முடிவடைநத பிறகு அவருடைய திருவடியிணைத் தாமரைகளில் மிகமிக அனபு கொணட பகவத் ராமானுஜ முனிவர் "திருமலை நம்பிகள செய்தருளிய திருமஞ்சன தீாதத கைங்கரியம பெருமானுககுப் பெருமகிழ்ச்சியை விளைத்ததனலும் அதுவே காரணமாகப பெருமாள் அவரிடம் மிகவுயர்நத அருளைச் செய்ததனலும் அதனை நினைவூட்டுவதான உதஸவம் ஒனறு பெருமானுககுச் செய்விக்க வேணடும். அவவுத்ஸவத்தையும, அத்யயனேத்ஸவம முடிநத மறுநாளில் திருமலை நம்பிகளிடம பெருமாள விசேஷானுகரஹம செய்தபடியினல், அந்த நாளிலேயே செய்விகக வேண்டும்" என்று கோவிலில கைங்கர்யம் செய்வோரை நியமிததார். பின்பு ஸ்தலவாஸிகளான பெரியோரும் பகவத கைஙகர்யம செய்பவருமாகிய அனைவரும, திருவேங்கடமுடையானுடைய அதயயனேத்ஸவம முடிந்த மறுநாளில முன்பு வேடவுருக் கொணட பகவான திருமஞசன தீர்ததங் கொணடு வரும் திருமலை நம்பிகளை நடுவழியில் எதிர் கொண்டு சென்று அவர் குடத்திலிருந்த தீர்த்தத்தைப் பானம் செய்த கதையை எல்லாரும் நினைத்துக் கொண்டு நல்வழி செல்லுக என்றெண்ணியவர்களாய், இராமானுச முனிவரை முன்னிட்டுக்

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—வித்வான, திருபபதி.

(ஸ்ரீமத அனந்தார்யா அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின தமிழ் மொழிபெயாபபு)

கொண்டு திருவேங்கடமுடையானை மங்கள கிரியில் ஏறியருளச் செய்து பரிவாரத்துடன் அவரை எழுந் தருளப் பண்ணிக் கொண்டு ஆகாச கங்கைக்குச் செல்லும் வழியில் சிறிது தூரம் சென்று, ஆகாச கங்கை யிலிருந்து தீர்த்தம் நிறைத்த குடங் களை எடுதது வருகின்ற சில ஸ்ரீவைஷ ணவர்களை எதிர் கொண்டு, திரு மங்கையாழ்வார் அருளிய பெரிய திருமொழியைத் தொடஙகி ஸேவித் துக் கொணடே ஊருக்குத் திரும்பி வநது, நான்கு வீதிகளில் எல்லா விடத்திலும் சென்று, அங்கங்கு ஸ்ரீ வைஷணவர்களால் தம் தம் திரு மாளிகை முன்றில்களில் திருவடி களில் தீர்த்தம் சேர்த்துச் சந்தனம் புஷ்பம் தூபம் தீபம தாம்பூலம் தக்ஷிணை இவற்றைத் தந்து ஸத்காரம் செய்யப் பெற்று, திரும்பிக் கோவி லுக்குள் புகுந்து ஸ்ரீ புருஷஸூக் தத்தை ஓதா நின்று, அப்போது கொண்டு வந்த ஆகாச கங்கா தீர்த்தக் குடங்களில் சிலவற்றைக் கொண்டு - இடைவிடாமல் சாத்திக் கொணடிருக்கும மலர்களால் கும் கும்மென்று நறுமணம் வீசுகின்ற திருவேங்கடமுடையான் திவ்ய திரு வடிகளையும் ஸ்ரீ சடகோபனென்னும் திவ்ய பாதுகைகளையும் திருமஞ் சனம் செய்வித்துச் சந்தன புஷ்ப தூப தீபாதிகளால் உபசாரம் பண்ணு வித்து, மற்றக குடங்களில் உள்ள- பரிமளம் அனைத்தும் சேர்த்ததனுல் கமழாநின்ற தீர்த்தத்தை ஸ்ரீநிவாஸ பகவானுக்குப் பருகும் நீராக நிவே தனம செய்வித்தார்கள். அது முத லாக, திருவத்யயனேத்ஸவம் முடிவு பெறற மறுநாளில் 'தணணீரமுதை எதிர் கொணடு செலலுமு திருநாள்' என்னும பெயர் பெற்ற உத்ஸவம் ஒவ்வொரு வருஷமுமு அநுஷ்டிக்கப் பட்டு வருகிறது. (இப்போது இது 'தணணீரமுது' என்று வழங்கப்படு கிறது.)

**திருமலையனந்தாழ்வான் வரலாறு: அவதாரம்:**

பகவத் ராமானுஜராக அவதரித்த ஆதிசேஷ பகவான் ஸகல சாஸ்திரப் பொருள்களையும் உபதேசிப்பதி லேயே ஊககங்கொண்டவராய், அவற்றை உபதேச மூலமாகவே யல் லாமல அனுஷ்டான மூலமாகவும் தெரிவித்து உலகோரை உய்விகக விருப்பம் கொண்டு, இவ்விரணடு செயலகளையும் ஒரே யுருவமெடுத்துச் செய்ய முடியாதென்று கருதி, ஸ்ரீபதரி காச்ரமத்தில் நரன் நாராயண னென்ற இரணடு உருவநதரித்த பக வான போன்று தானும் இரணடு உருவங்கொளள ஆசைப்பட்டு, மேல் நாட்டில் காவேரிக்கரையில் சிறு புத் தூரில் மிகச் சிறந்த பாரத்வாஜ கோத்திரத்தில் உதித்த-ஸ்ரீவைஷ் ணவ குலத் தலைவரான கேசவாசார்ய ரிடமிருந்து, கலி வருஷங்கள் 4154ம் சாலிவாஹன சக வருஷங்கள் 975ம கழிய, அடுத்த விஜய வருஷத்தில் சூரியன் மேஷராசியில் புகுந்தபோது (சித்திரை மாததததில்) சித்திரை நக்ஷத்திரத்தில் தம்முடைய அம்ச மாகவே ஒருவரை அவதரிக்கச் செய்ய, அவரே அனந்தாழ்வானுக அவதரித்தார்.

அதற்குப் பிறகு கேசவாசார்ய ரால்-ஆதிசேஷனைத் தாம் கனவிற் கண்டதனுல தமது குமாரரின் அவ தாரவுண்மையை ஊகித் தறிந்து அதற்கு ஏற்றபடி அனந்தாழ்வான் என்று பெயரிடப் பெற்று, முறையே சௌளம உபநயனம் முதலான எல்லாச் சடங்குகளும் செய்யப் பெற்று, அவர் தம்மிடத்திலேயே கலை கள் அனைததும் உபதேசம் பெறறு, சுக்ல பக்ஷ சநதிரனபோல் தினந் தோறும் அறிவு முதலிய ஒளியோடு வளர்நது வரும அனநதாழ்வான் ஸ்ரீரஙக நகரத்தில ராமானுசராக எழுந்தருளியிருக்கும் தமது அமசியான ஆதிசேஷனை, லக்ஷ்மணன் ராமபிரானையும் சத்ருக்னன் பரதனை யும் தலைவராக அடைந்தது போன்று ஆசார்யராக அடைய விருப்பங் கொண்டு யஜ்ஞேசன் (எச்சான்) முத லியவர்களோடு ஸ்ரீரங்க நகரம் சென்று சேர்ந்தார்.

**அனந்தாழ்வானை ராமானுஜர் ஏற்றுக்கொண்டது:**

இவர்கள் வந்து சேர்ந்த சில நாட் களுக்கு முன்பே பகவத் ராமானுஜ முனிவர்-யஜ்ஞமூர்த்தி என்று பெயா பெற்றுத் தமமோடு வாதம் செய்ய வந்த மகா பணடித ரொருவரை வாதத்தில் வென்று ஸ்ரீவைஷ்ணவ ராக்கிப் பேரறிவாளராகவும் பரம பாகவதோத்தமராகவும் மாறிய அவ ருக்குத் தம்முடைய எம்பெருமானர் என்னும் பெயரை உள்ளடக்கிய அரு ளாளப்பெருமா ளெம்பெருமானர் எனற திருநாமத்தைச் சாத்தி, அவ ருக்குத் தம்மோடு ஒத்த கௌர வத்தை உணடாக்க வேண்டுமென்ற விருப்பத்தினுல் அவரைத் தனியே ஒரு ஸ்தானத்திலே ஆசார்யராக வீற்றிருக்கச் செய்திருந்தார். இப் போது அனந்தாழ்வான் முதலிய இவர்கள் தம்மை ஆச்ரயிக்க வந ததும இராமானுச முனிவர் இவர் களை அந்த அருளாளப் பெருமாளெம் பெருமானரிடம் ஒப்படைத்து பகவ தாச்ரயணம் (பஞசஸமஸ்காரங்கள்) அவர் மூலமாகவே செய்வித்தரு ளினர்.

அவ்வருளாளப்பெருமா ளெம பெருமானரோவெனில், தம்மை ஆச்ரயித்துத் தமக்கே தொண்டு செய்து கொணடு சிஷ்யர்களாக இருக்கும்படி அனந்தாழ்வான் முதலி யோரையும், அவர்களுக்கு ஆசார்ய ராக இருககும்படித் தமமையும் ஆக் கிய ராமானுஜ முனிவரைப் பார்த்து, 'வாரீர் பகவத் ராமானுஜ முனிவரே, அடியேன இந்த ஆசார்ய பதவியாகிய சுமையைத தாங்கவல்லவன் அல் லேன். இவ்வனந்தாழ்வான் முதலி யோரை தேவரீர் சிஷ்யர்களாகவே கொள்ள வேணடுகிறேன்' என்றும், இவர்களைக் கணடு, 'வாரீர் அனந தாழ்வான் முதலான பெரியோர் களே, பகவத் ராமானுஜ முனிவர்

இவ்வாறு இராமானுச முனிவரால் வினவப் பெற்ற பெரியோர் கோஷ்டியில் யாரும் திருமலைக் குளிருக்கு அஞ்சிப் பதிலளிககாமலிருக்க அனந்தாழ்வான் - எம்பெருமானுககு அடியவனுனவன் மிகச் சிறிய இக் குளிருக்கு அஞ்சி நடுங்கலாமா? மேலுலகம் (பரமபதம்) கிடைக்காமற் போகுமே என்ற அச்சத்தாலும், எல்லையிலலாத நற்குண கணங்கள் நிறைந்த ஆசார்யருடைய ஆணையை மீறுவதனுலுண்டாகும் அச்சத்தாலும் சிறிதேனும் நடுங்க வேண்டாமா? இதுதானு சிஷ்யனுக்கு உரிய லக்ஷணம்? இது மிகவும் நன்ருயிருககிறது. ஆசாரியா நியமித்த காரியமன்ருே உய்வு பெற விரும்பும் சிஷ்யனுக்கு மேன்மையைத் தருவது? ஆசாரியரின் ஆணையை மீறுமவனுக்கு என்ன சிஷ்யத்வம் வேண்டியிருக்கிறது? ஆதலால் எவ்வளவு கடினமாயினும் ஆசாரியர் கட்டளையிட்ட இத்திருவேங்கட நாதனுடைய கைங்கரியத்தைச் செய்ய இசைவது தான் சிஷ்யனுக்குத் தக்கதும் உயர்ந்த வீடு பேற்றினைத் தருவதுமாகும் - என்று தம் மனத்தில் நினைத்து உடனே எழுந்து, கைகூப்பிக் கொண்டு, 'ஸ்வாமீ எம்பெருமானுரே, அடியேன் திருவேங்கடமுடையானுக்குப் புஷ்பகைங்கரியம் செய்ய ஸித்தனுயிருக்கிறேன், அடியேனை நியமித்தருள வேணும்' என்று தம்முடைய அவதாரத்திற்குப் பயனுகிய கைங்கரியத்தில (சாஸ்த்ரார்த்தானுஷ்டானததில) ஊறறத்தை விணணபபித்துக் வேண்டிக் கொணடார்.

### அனந்தாழ்வானைத் திருமலைக்கு அனுப்புதல்:

இங்ஙனம் வேணடும அனந்தாழ்வானைக கணட ஸ்ரீராமாநுஜ முனிவா மிகவும் மகிழ்சசியடைநது, 'வாரீர் அனந்தாழ்வானே, நீரல்லவோ இக கோஷ்டியில் ஆண பிளளை? ஆத்ம குணஙகள நிறையப் பெற்று, ஆசார்யரின் ஆணை மீறுதலைப பொறுத உமக்கேயனருே ஆசார்ய புருஷன் என்னும் பதம் தகுவது?' என்று அவரைக் கொண்டாடிக் கோஷ்டியிலுள்ள அனைவருடன் உடனே எழுந்து பரபரப்புடன் அவரை அணைத்துக் கொண்டு, ஆண பிள்ளையென்ற பிருதளித்துக கௌரவிக்கப் பெற்ற இவனநதாழ்வானைத் திருவேஙகட மலைககு அனுபபியருளினுர்.

### அனந்தாழ்வான் செய்த தொண்டுகள்:

பினபு அனந்தாண்பிள்ளை யாசாரியர் எனறு நாற்றிசையும் பரவிய பெயரையுடைய அனநதாழ்வான் தம் மனைவியோடு திருமலைக்குச் சென்று திருவேங்கடமுடையானைத் தினந்தோறும் சேவிததுக் கொணடு, அங்கு விசாலமானதொரு நந்தவனமும் அதற்கு உதவும் ஓர் ஏரியும் நந்தவனத்தின் நடுவில் ஓர் நடைவாவியும் உண்டாக்கி இவையெல்லாவற்றுக்கும ஸ்ரீராமாநுஜனென்று திருநாமம் சாத்தி, அவர் நியமித்த படியே புஷ்பகைங்காயத்தை ஊற்றததுடன செய்து கொண்டிருந்தார். மேலும் நந்தவனததிலுள்ள பழமரம் பூமரம புதா கொடி முதலியவற்றின் பாத்திகளிலும் நடை வாவியிலும், அவ்வப்போது தெளிப்பது பாயச்சுவது தேக்குவது நிறைத்துக கொளவது ஆகியவற்றுக்காக நீர் கொணடு வருவதற்கு உதவுகின்ற மதகு ஒனறினை ஏரியின் நடுக்கரையில் அவா ஏற்படுத்தினுர்.

இவ்வாறே பெருமாளுடைய கோவிலில் கோபுரத்தோடு கூடிய மதிலையும் அதறகுள் பூங்கிணறறின (பூலவாவியின) அருகில் எம்பெருமானுருததரவின்படி அவருடைய பரமாசார்யரான ஆளவநதாருடைய 'யமுனைத் துறைவர்' என்ற பெயர் சூட்டப் பெற்றதும் அவருடைய அர்ச்சாவிக்ரஹததோடு கூடியது மான பூமாலை தொடுககும் மண்டபம் ஒன்றையும் அனநதாழ்வான் கட்டுவித்தார்.

ஸ்ரீயாமுன முனிவர் (ஆளவந்தார்) முன்பொருகால் சில நாட்கள் இங்கு இருநது அவ்விடததில் ஒரு குடில் அமைத்துக் கொணடு அதில் பூமாலைகளை நிறையத் தொடுத்து ஸ்ரீநிவாஸ பகவானுககுச் சாத்திக் கொண்டிருநதாரென்று பெரியோர் கூறிய கதையைக் கேட்ட ஸ்ரீ பாஷ்யகாரர் (ராமானுஜர்) - ஆளவந்தாருடைய பெயரால ஒரு பூமாலை கட்டுதற்குத் தகக மண்டபம் கட்டி அதற்குள் ஆளவந்தாரை அர்ச்சை வடிவமாக நிருமித்துப் பிரதிஷ்டை செய்வித்துத் திருவாராதனமும் நடததி வைக்க வேணுமென்று நியமனம் செய்ததனுல், அனநதாழ்வான் அம்மண்டபத்திற்கு யமுனைத் துறைவரெனற திருநாமத்தோடு தமது ஆசார்யரான எமபெருமானுருடைய ராமாநுஜன் என்ற திருப்பெயரையும் சாத்தி அவர் கட்டளைப்படியே அனைத்தும் நிறைவேற்றினுர். தாமும் அம மணடபத்திலேயே ராமாநுஜ நந்தவனத்திலிருந்து புஷ்பங்களைக் கொணர்ந்து வைத்து மாலைகளையும் அஙகேயே தொடுத்துப் பின்பு மாலைகள நிறைநத பூக்குடலையைத் தலையில வைதது, நறுமணம் தமது மூக்குக்கு இலக்கானல அபசாரம நேருமெனறு அது நேராமலிருக்கத் தம மூக்கையும் வாயையும் துணியால் மூடிக் கட்டிக்கொண்டு மிகக பகதியுடன குடை சாமரம் முதலியவற்றுடனும மங்கள வாத்தியங்களுடனும அம்மணடபத்திலிருநது புறப்படுக கோவிலை வலம வந்து அதற்குள் எடுததுச் சென்று பெருமாள் திருவாராதன ஸமயத்தில் தினமும் சாததுவித்துத் திருவேங்கடமுடையானை ஸேவித்துக் கொண்டிருந்தார்.

(தொடரும்)

# ★ கீதை காட்டும் நல்வழி ★

திரு. டி. கே. நாராயணன்,
M.Sc., M.Phil.,
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

## புருஷோத்தம யோகம்

**அத்தியாயம்—15.**

**பகுதி—14.**

'புருஷோத்தமன்' என்ற வார்த்தையின் விளக்கம் யாது? பகவானே விளக்கம் தருகிறார்.

'யஸ்மாத் க்ஷரமதீதோ ஹம
அக்ஷராதபி சோத்தம: |
அதோ ஸ்மி லோகே வேதே ச
ப்ரதித: புருஷோத்தம: ' ||
(15 — 18)

'க்ஷரத்தைக் கடந்து அக்ஷரத்துக்கும் மேலானவனாக நான் இருப்பதால் உலகிலும் வேதத்திலும் புருஷோத்தமன் என்று புகழ்பெற்றிருக்கிறேன்'.

க்ஷரம், அக்ஷரம். ஈசுவரன் இம் மூன்றைக் குறித்து சுவேதாஸ்வர உபநிஷதத்தில் கீழ்க்கண்ட மந்திரம் காணப்படுகிறது.

क्षरं प्रधानं अमृताक्षरं हर:
क्षरात्मानावीशते देव एक: (1-10)

க்ஷரம் பிரதானமமிருதாக்ஷரம் ஹர: |
க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக' ||
(1-10)

'பிரகிருதி அல்லது இயற்கையின் பெயர் க்ஷரம். அதை அனுபவிக்கும் அழியாத ஆத்மனின் பெயர் அக்ஷரம். பிரகிருதி மற்றும் ஆதமா இரணடுக்கும் அடிப்படையாயமைவது புருஷோததமன் ஆகும்'.

புருஷோத்தமன் - பரமாத்மனைக் குறிக்கும் இப்பெயர் உலகிலும், வேதங்களிலும் மிகவும் பிரசித்தமானது. உலகில் பெயரில்லாத எந்தப் பொருளும் கிடையாது. உலகில் உள்ள எந்த மனிதனுக்கும் ஒரு பெயருணடு. அதே போல பரமாத்மாவுககும் 'புருஷோத்தமன்' என்ற பெயா மிகவும் பிரசிததமானது.

இந்த சம்சார மரம் (அச்வத்தம் என்று முதல் சுலோகத்தில் கூறப்பட்டது) அழியக்கூடியது. இதுவே க்ஷரம். (ஸம்ஸார மாயா விருக்ஷம்) இந்த சமசார விருக்ஷத்தின் விதை அக்ஷரம் ஆகிறது. அது அழியாதது. (ஸம்ஸார விருக்ஷ பீஜம்) இந்த சமசார மரம் மற்றும் அதன் விதை இரண்டிற்கும் பகவான் அப்பாற்பட்டவர். அவா புருஷோத்தமன் பகதர்கள், மகான்கள், கவிஞர்கள் அனைவரும் இப்பெயராலேயே பகவானைக் குறிப்பிடுகின்றனர்கள்.

ஒரு சம்ஸ்கிருத ஸ்லோகம் கீழ் வருமாறு புருஷோத்தமனை விளக்குகிறது.

'ஸாதவோ யம் ப்ரசம்ஸந்தி யம்
ப்ரசம்ஸநதி பண்டிதா:
ராஜானோ யம் பரசம்ஸந்தி ஸ
பார்த்த புருஷோததம': |

'சாதுக்களும், பண்டிதர்களும், அரசர்களும் எவனைப் புகழ்கின்றனர்களோ அவனே புருஷோத்தமன் ஆவான்'.

அசைகின்ற ஒன்றுக்கு அசையாத மற்றொன்று ஆதாரமாக இருத்தல் வேணடும். அழியும பொருள்களுககு ஆதாரமாக அழியாத வஸ்து ஒன்று இருத்தல் வேண்டும். ரயில் நிலையத்தில் ஒரு ரயில் வண்டி நின்று கொண்டிருந்து, மற்றொன்று வேகமாக அதைக் கடந்து செல்லுமாகில் ஓடும் வணடியின் வேகத்தை நாம் உணர முடியும். இரண்டு ரயில்களுமே ஒரே வேகத்தில் ஓடிக் கொண்டிருக்குமாகில், எதனுடன் எதை ஒப்பிடுவது?

விமானத்தில் பயணம் செய்தால் மற்றொரு புது அனுபவம் கிடைக்கும். முதலில் விமான நிலைய ஓடு பாதையில் விமானம் கிளம்பும் போது மெதுவாக விமானம் தரையில் ஓடத் தொடங்கும். அவ்விதம் கொஞ்ச தூரம் ஓடிய பிறகு மேலே ஏறத் தொடங்கும். அப்பொழுது தரையில் உள்ள கட்டடங்கள் நம் கண்களிலிருந்து சிறிது சிறிதாக மறையும். மேகங்களுக்கு மேலே விமானம் பறந்து கொண்டிருக்குமானால் கீழே கடலும் தெரியாது, மலையும் தெரியாது. மேலேயோ ஆகாசம். இரண்டு பக்கங்களிலும் வெட்ட வெளி அப்போது விமானத்திற்குள்ளே இருக்கையில் குளு குளு என்று 'ஏஸி' சூழ்நிலையில் அமர்ந்திருக்கும் நமக்கு விமானம் பறப்பதே தெரியாது. காரணம் விமானத்தின் வேகத்தை ஒப்பிடுவதற்கு மற்றொன்று அங்கே கிடையாது. சென்னையில் போயிங் 747 விமானத்தில் காலை 11-30க்கு ஏறிய நாம் 5-30க்கு வங்காள விரிகுடாக்கடலைக் கடந்து ஆயிரக்கணக்கான மைல்கள் தாண்டி பினாங் விமான நிலையத்தில் விமானம் இறங்குகையில்தான் 'நாம் இத்தனை மணி நேரமா விமானத்தில் பயணம் செய்திருக்கிறோம்' என்று ஆச்சரியமடைவோம்.

இதனடிப்படையில்தான் ஐன்ஸ்டீனின் சார்புக் கொள்கையும் அமைகிறது. உடல், மனம், புத்தி ஆகியவற்றில் ஏற்படும் மாற்றங்களின் பின்னணியில் இத்தனையையும் ஒளிர்விக்கும் ஒரு மாறாத தத்து

# கண்ணழகு

செவ்வரி ஓடி நீண்ட அப்பெரியவாய கண்கள் என்றும், தாமரைக் கண் என்றும் எம்பெருமானுடைய கண்ணை ஆழ்வார்கள் அனுபவித்தார்கள். 'சக்ஷுஷா தவஸௌம்யேன பூதாஸ்மி ரகுநந்தன' என்று எம்பெருமான் கண்ணழகில் ஈடுபட்டு பேசினள் சபரி ஸ்ரீராமாயணத்தில் அநுமன் சீதையைக்கண்ட விவரத்தை பலவாறாகக் கூறிக்கண்களால் தெரியக்கண்டேன் என்று பிராட்டியைக் கண்களாக கொண்டு நிச்சயித்தான். மேலும் இக்கண்ணழகைப் பிரிந்து ராமன் உடனே மாய்ந்து போகாது வாழ்வதே சாகஸம என்கிறான இதனுல் பிராட்டியின் நோக்கு எம்பெருமானுடைய கண்ணழகிலும் உயர்ந்தது என்பது பெறப்படும். பட்டரும் எம்பெருமானுடைய நாச்சியார் திருக்கோலத்தை ஸேவித்து கோலம் அழகிது இருப்பினும் கண்கள் காட்டிக்கொடுக்கின்றன தேவரீரது திருக்கண்கள பிராட்டியினுடைய அருள்வெள்ளம கோத்த திருவிழிகளுக்கு நேரொவ்வா என்றார். நாச்சியார் விழிவிழிக்க வொண்ணாதே என்றிரே அவரது அநுஸந்தானம் வால்மீகி பகவான்.

துல்லிய சீல வயோவிருததாம் துலயாபி ஜன லக்ஷணம |
ராகவோர்கதி வைதேஹிம தம்சேய மஸி தேக்ஷணு ||

ராகவனும் சீதாபிராட்டியும் ஒருவரை ஒருவர் ஒத்த பெருமையினர். ஒத்த நடத்தையினர், ஒத்த வயதினர், ஒத்த குணததினர், ஒத்த உயர் குடிப்பிறப்பினர், ஒத்த வடிவழகு உடையவர். ராகவனுக்குச் சீதையும், சீதைக்கு ராமனுமே சரி நிகராவர் என்று இருவருடைய சமானயோக்யதையைப் பேசவந்த மகரிஷி பிராட்டிக்கு "தம் சேயம் அசிதேக்ஷணு" என்று பிராட்டிக்கு அதிக அடைமொழி ஒனறை சேர்த்துக் கூறினர். கருங்கண்ணியான பிராட்டியைக் கண்ணழகில் விஞ்சியவள் என்பதை அவர் கூற நினைந்திலரேனும் உளளமும், உரையும் இவள் கண்ணழகில் மிக்காள் என்பதை உறுதி செய்துவிட்டது. துல்யம என்ற மகிரிஷி வார்த்தையை ஏற்றுக் கொள்வோம். இந்த அடைமொழியின் சிறப்பினை ராமர், சீதை இருவரது சொற்களாலேயே நிர்ணயிப்பம். அநுமன் பிராட்டியைக் கணடு சூடாமணி பெற்று ராகவனிடம் வந்து சேர்கிறன். பிராட்டியின் நிலையெல்லாம் தெளிய உரைக்கின்றான். மனம் நெகிழ்ந்த பெருமான் மதுரா மதுராலாபாகிமாக மம பாமினி என்று கேட்டான். அப்பொழுது அநுமன் "பிராட்டி 'ஒரு மாத காலம் எப்படியாவது ஜீவித்திருக்கிறேன் ஊர்த்வம மாசாந் ந ஜீவிஷ்யே" அதறகுள் பெருமாள் எழுந்தருளி என்னை மீட்க வேணடும்' என்று அருளிச் செய்தார்" என்றனன். அப்பொழுது ராமன் அப்படியா? அவள் சிலகாலம் ஜீவித்திருப்பாள் ஐயோ! என்னுல் அவள் பிரிவை க்ஷண நேரம்கூட தாங்க மாட்டேன். ஜலததிலிருந்து கரையிலே எறியப்பட்ட மீனைப்போல க்ஷண நேரத்தில் உயிர பிரிந்து, மடிந்து போவேன, "ந ஜீவேயம் க்ஷணமபி" என்கிறான். பெருமாள் நோக்கினைப்பிரிந்து பிராட்டி ஊர்த்வம் மாசாந் ந ஜீவிஷ்யே என்றாள். பெருமாளுடையபிரிவுபிராட்டிக்குஒருமாதகாலம்தாங்கக்கூடியதாக இருநதது பிராட்டியின் பிரிவோ க்ஷணத்திலே மடிநது போவேன் என்று கூறும்படி இருந்தது. யார கண்ணின் பிரிவு தாங்கவொண்ணாததாக இருந்தது. பிராட்டியின் அருள்நோககைக் காணாத ராமன் மடிய சித்தமானன். பிராட்டி ராமனுடைய பிரிவில் ஒரு மாதம் ஆரி இருப்பேன் என்றாள். க்ஷணப் பிரிவில் உயிர்மாய்த்துக் கொள்ளும்படியான பேரழகிய கண்கள் பிராட்டியினது. க்ஷணநேர இழப்பைத் தாங்க முடியாதது அவ்வளவு பேரழகிய கணகள். ஆனுல் ராமபிரானுடைய திருககண்கள் நீண்ட அப்பெரியவாய கணகளைப் பிரிநத இழப்பினை ஒரு மாத காலம் தாங்கக் கூடியதாக இருந்தது. இதிலிருந்து அவர்களுடைய சொற்களினாலேயே பிராட்டியின் கண்ணழகு ஏற்றம் கூறப்பட்டதாம்.

மிகச்சிறந்த உயர்பொருளைபிரிந்தால் க்ஷணநேரத்தில்பிரிவாற்றாமையால் முடிந்துபோவர். சாதாரண இழப்பில் சற்று ஆரியிருப்பர். பிராட்டியின் கண்ணுயர்வால் க்ஷணநேரம்கூட உயிர் வாழகில்லேன் என்கிறார் ராமர்.

கொட்டையூர். தம்பு. ப. கிருஷ்ணசாமி.

வம் இருக்க வேண்டும். மாறுபவை க்ஷரம் ஆனல், மாறாதது அக்ஷரம் ஆகிறது. க்ஷரத்துடன் ஒப்பிடுகையில் தான் இது அக்ஷரம் எனப்படுகிறது. க்ஷரத்தைக் கடந்து போய்விட்டால், அவற்றிடையே உள்ள அக்ஷரம் தூய அறிவு சொரூபமாக அதாவது புருஷோத்தமனாக ஒளிர்கிறது.

இத்தகைய புருஷோத்தமனை அறிந்தவன் எத்தகைய பாங்கினை அடைகிறான் என்ற கேள்விக்கு அடுத்த சுலோகத்தில் விடை வருகிறது.

யோ மாமேவமஸம் மூடோ
ஜாநாதி புருஷோத்தமம |
ஸ ஸர்வவித்பஜதி மாம்
ஸர்வபாவேன பாரத || (15-19)

'பாரதா! யார் மயக்கம் நீங்கின வனாக இவ்வாறு என்னைப் புருஷோத்தமன் என்று அறிகிறானே, எல்லாம் அறிந்த அவன் முழு மனதோடு என்னை வாழ்த்துகிறான்!'

ஒன்று பலவாகக் காட்சி கொடுப்பதுதான் பிரபஞ்சத்தின் இயல்பாகும். ஒரே பொருள் பல பெயர்களில் பல நிலைகளில் காட்சி அளிப்பதற்கு எத்தனையோ சான்றுகள் கூறலாம். உதாரணமாக நீர் திடநிலையில் பனிககட்டியாகவும், திரவ நிலையில் நீராகவும், வாயு நிலையில நீராவியாகவும் காட்சி அளிக்கிறது. ஆனல் அடிப்படையில் அது இரண்டு ஹைட்ரஜன் அணுக்களாலும் ஒரு ஆக்ஸிஜன அணுவாலும் ஆக்கப்பட்ட ஒரு கூட்டுப்பொருளே. இது போல கிராபைட்டும் வைரமும் அடிப்படையில் கரியே அன்றி வேறல்ல. இவ்விதம் எண்ணற்ற எடுத்துக்காட்டுகள் கூறலாம்.

அழகான பெண் ஒருத்தி அவளது கணவனுக்குக் கட்டழகு மனைவியாகவும், தாய் தந்தையருக்கு அன்புக்குரிய மகளாகவும், குழந்தைக்கு வேளா வேளைக்குப் பால் கொடுக்கும் அன்னையாகவும், காட்டிலுள்ள

புலிக்கு நல்ல இரையாகவும், உடற்கூறு விஞ்ஞானிக்கு எலக்ட்ரான்களின் ஒரு தொகுப்பாகவும், வைராகி ஒருவருக்கு மலம், மாமிசம், மூத்திரம், சளி நிறைந்த ஒரு தோல் பையாகவும், காமுகன் ஒருவனுக்குப் போகப் பொருளாகவும் காட்சி அளிக்கிருள். பொருள் ஒன்றுதான். ஆனல் பார்ப்பவரின் மனப்பாங்கிற்கேற்ப காட்சி மாறுகிறது. பொருளில் மாற்றம் இல்லை.

இது போலவே உலகில் ஒரு பொருள் ஆணுகவும், இன்னென்று பாம்பாகவும், பிறிதொன்று பெண்ணுகவும், வேருென்று மரமாகவும், மலையாகவும் கடலாகவும் காட்சியளிக்கின்றன. தோற்றத்தில் பல வாருகத் தோற்றம் அளிக்கும் இத்தனையும் அடிப்படையில் எது? 'பிரம்மம்', 'பகவான்', 'பரம்பொருள்', 'ஆன்மா', 'கடவுள்' என்று மறைநூல்கள் கூறுகின்றன.

பரம்பொருள் ஒன்றே. அது பல வாருகக் காட்சி அளிககிறது. ஏன்? நம்மிடம் உள்ள மதிமயக்கத்தால், அக்ஞானத்தால், அறியாமையால்: மயக்கம் அகன்றவனுக்கு, ஞானம் கைவரப் பெற்றவனுக்கு அனைத்தும் ஒரே பரம்பொருளாகத் தென்படுகிறது. காக்கைச் சிறகினிலும், பார்க்கும் மரங்களிலும், கேட்கும் ஒலியிலும், தீயிலும் நந்தலாலாவைப் பாரதி கண்டு களித்தாரில்லையா? அது போல.

எடுத்த எடுப்பிலேயே பரம்பொருள் காட்சி நமக்குக் கிடைத்துவிடாது. அதற்குத் தீவிரமான பயிற்சியும், மனப்பக்குவமும் வேண்டும். இருட்டினில் பாம்பாகத் தெரிந்தது அருகில் சென்றதும் கயிருகத் தெரிவதுபால, மேயக்கத்தில் பலவாருகத் தோன்றியது, ஞானத்தில் ஒரே பரம்பொருளாகத் தெரியும். மனத்தில் மாசு அகன்று அது தூய்மையின் உறைவிடமாக ஆகும்போது பன்மைக் காட்சி ஒருமைக் காட்சியாக ஆகிவிடுகிறது. அப்படி எவன் எல்லாவற்றையும் இறைவனுகக் காண்கின்ருனே அவனே அனைத்தையும் அறிந்தவனுகிருன்.

பரம்பொருள் காட்சியில் பல படித்தரங்கள் உண்டு. ஆரம்பத்தில் எல்லாவற்றிலும் இறைவனைக் காண வேண்டும். இறுதியில் அனைத்தையும் இறைமயமாகக் காண வேண்டும் இதுவே ஞானத்தின் உச்சநிலை. அத்தகையவனே பிரம்ம ஞானி. அவனே 'பிரம்மவித்' அல்லது 'பிரம்மத்தை அறிந்தவன்' எனப்படுகிருன். அத்தகைய பிரம்ம ஞானி பிரம்மாவாக ஆகிவிடுகிருன். 'பிரம்மவித் பிரம்மைவ பவதி' அந்த நிலையில் அவன் பேசும் பேச்செல்லாம் பூஜையாகவும், செய்யும் செயல்களெல்லாம் தேவ ஆராதனையாகவும ஆகிவிடுகிறது.

இத்தகைய கடவுள் காட்சியில் ஒருவன் நிலைபெறுவதால் அவன் பெறும் நன்மை யாது என்ற கேள்விக்கு பகவான் இந்த அத்யாயதில் இறுதி சுலோகத்தில் விடை தருகிருர்

இதி குஹ்யதமம் சாஸ்த்ரம்
இதமுக்தம் மயா அனக।
ஏததபுத்த்வா புததிமான ஸ்யாத்
க்ருதக்ருத்யஸ்ச பாரத ॥ (15-20)

'குற்றமற்றவனே, இங்ஙனம் ஆழ்ந்த இந்த சாஸ்திரம் என்னல் எடுத்தியம்பப்பட்டது. அர்ஜுன: இதை அறிபவன் ஞானியும் வாழ்வாங்கு வாழ்ந்தவனுகவும் ஆகிருன்.'

கீதை முழுவதுமே சாஸ்திரம் என்ருலும், இந்த அத்யாயம் மட்டும் சிறப்பாக சாஸ்திரம் என்று கூறப்படுகிறது. ஏனெனில் அகில வேத சாரம் இதில் அடங்கியுள்ளது.

'பாரத', அனக' என்ற இரு வார்த்தைகளால் பகவான் அர்ஜுனனை இங்கே அழைக்கிருர். 'பாரத' என்ருல் சீரிய பாரத குலத்தில் உதித்தவனே என்றும், 'அனக' என்ருல் மாசற்றவனே என்றும் பொருள். ஒருவன் ஞானத்தைப் பெறுவதற்கு உயர் குடியில் பிறந்தால் மட்டும் போதாது, மனத்துக்கண் மாசிலனுதல் வேண்டும் என்பது இதன் உட்பொருள். 'அந்தணன் என்போன் அறவோன்' என்று திருக்குறளும் இதே கருத்தை விளக்குகிறது.

உலகக் கல்வியைப் பெற்ருல் மட்டும் ஒருவன் 'புத்திமான்' ஆகிவிட முடியாது. அதெல்லாம் புறக் கல்வி. ஆனல் உண்மையான அறிவு இறை ஞானமேயாகும். ஆகவேதான் உலகியலில் எத்தனை விஞ்ஞானக் கல்வி கற்றிருந்தாலும், மெய்ஞானக் கல்வி இன்றேல் அது குறையுடையதாகிறது. எனவேதான் பகவான் இங்கே 'இந்த உயர் ஞானத்தைப் பெற்று புத்திமான் ஆவாயாக' என்கிருர்.

அது மட்டுமல்ல, உயர் ஞானத்தை ஒருவன் அடைந்தால் தான் 'க்ருதக்ருத்யன்' அல்லது 'வாழ்வாங்கு வாழ்ந்தவன்' ஆகிருன் என்பது பகவானது கூற்று. ஏதோ மற்ற விலங்குகள், பறவைகளைப் போல பிறந்தோம், வாழ்ந்தோம செத்தோம என்று இல்லாது மெய்ஞானத்தைப் பெற்றுப் பிறப்பிறப்பற்ற பெருநிலையை அடைவதுதான் மனிதப் பிறவியின் இலட்சியம் என்பதைப் பகவான் தனது முடிநத முடிவாக இங்கே வலியுறுத்துகிருர். பெறற்கரிய இமமானிடப் பிறவி வெறுமனே உண்டு உறங்கிக் கூடிக் குலவுவதறகாக மட்டும் அமையவில்லை. இறைவனை அடைவதற்காகவே என்பதை உணர்ந்து நல்லோராக இருந்து, நல்லது செய்து நாம் பெருநிலையை அடைவோமாக!

(தொடரும்)

12-ம் பக்கத் தொடர்ச்சி)

ஞந்து பார்த்துதான் நவக்கிரக தரிசனம் செய்ய வேண்டும். அழகான சிறிய மண்டபத்தின கூரையில் நவககிரகங்களைப் பதித்திருக்கிறார்கள். அருகிலேயே ராசிகளுக்கான கட்டங்களையும் அமைத்திருக்கிறார்கள்.

இராமேஸ்வரம கோயிலின் பிரகாரம் ஒவ்வொரு பக்கத்துக்கு ஆயிரம் அடி நீளம் கொணடது. சுற்றி வலம் வநதால் நாலாயிரம் அடி நீளம். இவ்வளவு நீளமான பிரகாரம் உலகத்தில் வேறு எங்கும் கிடையாது. ராமநாதபுரம் மாவட்டத்தில் 'குன்றக்குடி' என்னும் திருத்தலத்தில் ஒன்பது கிரகங்களும் ஒரே திசையினை நோக்கி மேற்கு முகமாக காட்சியளிக்கின்றனர். மற்ற தலங்களில் வெவ்வேறு திசையை நோக்குவதே மரபு. தணணீரையே சிவலிங்கமாய்த் திரட்டி அம்பாள் பூசித்த திருத்தலம் திருவானைக்கா; விநாயகர் சிவ பூஜை செய்த திருத்தலம் திருச்செங்காட்டங்குடி.

சூரசம்ஹாரத்தின் பொருட்டு முருகப் பெருமான் செல்லும் வழியில் மணணியாற்றங்கரையில் சிவ பூஜை செய்த இடம் திருச்சேய்நலூர். சக்கரம பெறும் பொருட்டு திருமால் அரனைப் பூஜித்த இடம் திருவீழிமலை. பிரமதேர் பூஜித்ததலம் பிரமபுரம். இந்திரன் பூஜித்த திருத்தலம் கண்ணார் கோயில். எறும்பு பூஜித்த இடம திருச்சிக்கு அருகில் உள்ள திருஎறும்பூர். யானை பூசித்த தலம் திருவானைக்கா.

அன்னை காமாட்சி குடி கொணட காஞ்சிபுரத்தில் உள்ள கசசபேஸ்வரர் ஆலயத்தில் நவ நாயகர்களை விமானத்தில ஜாதகக் கணிப்பாக அமைத்துள்ளனர். விமான அமைப்பிலேயே இறையனுா சிவபெருமான் நவ நாயகர்கள், அதிதேவதையர், மேஷம் முதலான ராசிகள் பன்னிரண்டு, கிரேதா, திரேதா துவாபர, கலியுகங்கள் நான்கு, பிரதமையில் தொடங்கும் திதிகள் பதினைந்து, நட்சத்திரங்கள் இருபத்தேழு, பவம் முதல் கரணங்கள் பதினொன்று, விஷ்கம்பம் முதல் வைதிருதி ஈறுன யோகங்கள் இருபத்தேழு, சப்த மாதாக்கள், அஷ்ட வஸுக்கள், த்வாத சாதித்யர்கள் ஆகியவர்களைக் கண்டு களிக்கலாம். வடஆற்காடு மாவட்டத்தில் வாலாஜாப் பேட்டைக்கருகில் உள்ளது ஷடாரண்யம் என்னும் ஆறுகாடுகளில் வன்னிக்காடான இது. சனி பகவானின் தோஷம் நீங்க இங்கு வழிபடலாம். சனி பகவானுக்கு உகந்தது. அகஸ்தியரால் பூஜிக்கப்பட்ட சிவலிங்கம இங்குள்ளது. கோவிந்தவாடி அகரம் என்னும் தலம் அரககோணத்திற்கு அருகில் உள்ளது. தட்சிணாமூர்த்திப் பெருமாளின் தனிச் சந்நிதி இவ்வூர் ஈசனின் கோயிலில் உள்ளது. தக்ஷிணாமூர்த்தி பெருமானின் கோலம காண்பவர்களைப் பரவசப்படுத்தும். குரு பகவானுக்கு பரிகாரம் செய்ய இத்தலம் உகநதது.

விரிஞ்சிபுரம் என்னும் சிவத்தலம வடஆற்காடு மாவட்டத்தில் வேலூருக்கு அருகில் உள்ளது. இஃது பிரம்மனின் சாபம் நீங்கப்பெற்ற அரிய தலம். கார்த்திகை மாதம் கடை ஞாயிறு மிகவும் விசேஷம். இறைவனின் பெயர் வழித்துணை நாதர். ஈசனின் முடி வளைந்திருப்பது காணத் தகுநதது. வரதட்சிணை வாங்குவதைத் தடைசெய்து விஜய நகர மாமன்னர் போட்ட சட்டம் கல்வெட்டில் உள்ளது. விருத்தாஜலம விருத்தகிரீஸ்வரர் ஆலயத்தின் உள்ளே, ஆழத்துப் பிள்ளையார் கோயில் கிழக்கு முகமாக 18 அடி ஆழத்தில இருக்கினறது. இது போன்று வேறு எங்குமில்லை. விருததாசலத்திலிருந்து 3 கி. மீ. தூரத்தில் உள்ள மணவாள நல்லூரில் கொளஞ்சியப்பர் என்னும் முருகன் கோயில் உள்ளது. (சுயம்புவாக தோனறியது) இறைவனைத் தரிசித்து வலம் வருபவர்களுக்கு மற்ற மூன்று இடங்களிலும் பார்க்கும்படி அமைநதுள்ளது.



# பத்தும் பத்தாக

ஸ்ரீ வைஷ்ணவ மரபு வ்யாக்யானங்களில் முழுவதும் என்ற பொருளில் பத்தும் பத்தாக என்று நூற்றுக்குநூறு விழுக்காட்டினைக் குறிப்பர். இச் சொல்லே விளக்கம் கொண்டதாய் அமைந்திருந்தாலும் இச்சொல் தோற்றத்திற்குப்பின்னணியும்உள்ளது.இராவணனைப்பத்துசிரங்களையும் ஒன்றுகூட எஞ்சாது முற்றிலும் அறுத்துக் கொன்றான் என்பர். தலை பத்து உதிர ஒட்டி என்றும், இலங்கை மன்னன் ஐந்தொடைந்து பைந்தலை நிலத்துக என்றும் இப்புடைகளிலே பேசுவர். பத்துத் தலைகளில் ஒன்றையும் மீதமாக வைக்கவில்லை என்றும் பூர்ணம் என்றும் இப்பொருளில் பத்தும்பத்தாக என்று அருளினா. வாணனுயிரம் தோள்துணித்த என்ற இடங்களில் ஆயிரம் தோள்களையும் எமபெருமான் துணித்தானல்லன். சிவபிரானது பிரார்த்தனைக்கிணங்க நானகு தோள்களை விட்டு விட்டு எஞ்சிய தோள்களை அழித்தான் என்பது புராணங்களில் கண்ட உணமை. இருப்பினும் ஆழ்வார்களும்,மற்றவர்களும் திருமாலை ஆயிரம் தோள் துணித்தான் என்று கூறுவர். இவவாறு ஒனறிரணடு எஞ்சியிருந்தும் முழுமையாக கூறும இலக்கிய வழககு போல் அல்லாது பத்தும் பததாக சிரமறுத்து ராவண வதம் செய்த செயலை ஒட்டியே இச்சொல் விந்யாசம் தோன்றிற்று என்பர்.

கொட்டையூர் தமபு. பா. கிருஷ்ணசாமி

# வெண்கனூரும் சிவப்பிரகாசரும்

"மலர்த்தேன் ஒழுகி வயலே விளையும் திருவெங்கை" (செய்யுள்: 426 திருவெங்கைக் கோவை) என்றும, 'எழிலி கண்படுக்கும் பொழில புடை சூழ்நத வெங்கையம்பதி' (செய்யுள்: 1 திருவெங்கைக் கோவை) என்றும் வெண்கனூரை சிவப்பிரகாச சுவாமிகள் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவ்வூர் திருச்சிராப்பள்ளி மாவட்டம், பெரம்பலூர் வட்டததிலுள்ளது.

சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த கெங்கவல்லி என்னும் ஊரிலிருந்து, கிழக்கு நோக்கிப் பெரம்பலூர் செல்லும் பேருந்துப் பாதையில் அமைந்துள்ளது, வெண்கனூர் என்னும் சிற்றூர். பெரம்பலூரிலிருந்து சுமார் 18 கி. மீ. தொலைவிலும், சேலம்-கடலூர் புகை வண்டிப்பாதையிலுள்ள தலைவாசல் புகை வண்டி நிலையத்திலிருந்து 20 கி. மீ. தொலைவிலும் உள்ளது இவ்வூர். இன்று கேட்பார் அற்றுச் சிறு கிராமமாகத் திகழ்கிறது.

'கூகையூர் கொடுங்கை அழகும், வெணகனூர் வேலையழகும' என்னும் சொற்றொடர் அந்த வட்டாரத்தில் வழங்கப்பட்டு வருகிறது. வெணகனூர் வேலையழகு என்பது அவ்வூரிலுள்ள பழமலைநாத சுவாமி ஆலயச சிற்ப வேலைப்பாடுகளைக் குறிக்கும்.

இக்கோயில கட்டப்பட்டதைப் பறறிய வரலாற்றுச் செய்தி. கி பி. 17 ஆம் நூறறாண்டில் இவ்வூரின குறுநில மனனராக இருந்த லிங்கா ரெட்டியாரும, அவருடைய மகன் அண்ணமலை ரெட்டியாரும் ஒவ்வொரு பிரதோசத்தனறும் தென்னாக்காடு மாவட்டததைச் சேர்ந்த விருத்தாஜலத்திற்குச் சென்று, அக் கோயிலில் உள்ள பழமலை நாதரை வழிபட்டுத் திரும்பி வந்த பிறகே உணவு உட்கொள்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

வழக்கம் போல, இருவரும் விருத்தாஜலத்திற்குக் குதிரையில் செல்லுமபோது அவர்களுடைய பயணத்திற்குத் தடையாக வெள்ளாற்றில் வெள்ளப் பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருந்தது; அவர்களுடைய வழிபாட்டுக்குத் தடை ஏற்பட்டது. ஆகவே அன்றிரவு இருவரும் ஒரு மண்டபத்தில் கண்ணுறங்கிக் கொண்டிருந்தபோது இறைவன் கனவில் தோன்றி, இனி நெடுந்தூரம் விருத்தாஜலம் வந்து தம்மைத் தரிசிக்க வேணடியதில்லை என்றும், வெண்கனூர் ஆற்றங்கரையில் விருத்தாஜலம் கோயிலைப் போலவே ஒரு கோயிலைக் கட்டிக் கொண்டு வழிபாடு செய்யலாம் என்றும், வெண்கனூரில் நிலத்திற்கடியில் லிங்கம், முதலிய படிமங்கள் புதைந்து கிடக்கின்றன என்றும் கூறிச் சென்றதாகவும, ஆகவே லிங்கா ரெட்டியார் வெண்கனூர் கோயில் திருப்பணியை மேற்கொண்டதாகவும் ஊர் மக்களிடம செவி வழிச் செய்தி வழங்கப்பட்டு வருகிறது. இச்செய்தியை 1961 ஆம ஆண்டு இந்திய சென்ஸஸ் அறிகையும் கூறுகிறது.

விருத்தாஜலமும வெண்கனூரும் :

வெண்கனூர் கோயில் விருத்தாஜலம கோயிலைப் போன்ற அமைப்பைக் கொண்டது 'விருத்தாஜலத்துக்குப் பிறுதி நாமமான வெணகனூர்' என்று கல்வெட்டுக் கூறுகிறது விருததாஜலத்தில் தென் கிழக்கு மூலையில் உள்ள 'ஆழத்துப் பிள்ளையார்' கோயிலைப் போலவே இங்கும் ஆழத்துப் பிள்ளையார் கோயில் அமைக்கப்பட்டுள்ளது.

ஆழத்துப் பிள்ளையார் கோயில் நிலவறையில் அமைக்கப்பட்டுள்ளது உள்நாழியைச் சுற்றித் திருச்சுற்றும் அமைக்கப்பட்டுள்ளது. கீழே இறங்கிச் செல்லப் படிகள் காணப்படுகின்றன.

கோயிலின் வடமேற்கில் காணப்படுவது கல்யாண மண்டபம். நுணுக்கமான வேலைப்பாடு அமைந்த சிற்பத் தூண்கள் மண்டபத்தை அழகுபடுத்துகின்றன. உட்பக்கச் சுவர்களில் கோயில் திருப்பணி பற்றிய சுவர் ஓவியங்கள் காணப்படுகின்றன. இலிங்கா ரெட்டியாரும், அண்ணமலை ரெட்டியாரும் விருத்தாஜலம் செல்லும் வழியில் வெள்ளாற்று வெள்ளம் குறுக்கிடும் காட்சியும், திருப்பணியின் பல நிலைகளை விளக்கும் காட்சிகளும், சிவப்பிரகாச சுவாமிகளின் பாடல் ஒன்று எழுதப்பட்ட ஏட்டைக் கோயில் தேரின்மீது வைக்க தேர் எரியும் காட்சியும் குறிப்பிடத் தக்கவையாகும்.

ஆழத்துப்பிள்ளையார் கோயிலும் கல்யாண மண்டபமும் 1919 ஆம் ஆணடு கட்டப்பட்டதாக 1961 ஆம் ஆண்டு சென்ஸஸ் அறிக்கைச் செய்தி சரியல்ல. 'விருத்தாஜலத்திற்குப் பிறுதி நாமமான வெண்கனூர்' எனறு கல்வெட்டுச் செய்தி காணப்படுவதால் கோயில் திருப்பணி செய்யப்பட்ட 17 ஆம் நூற்றாண்டிலேயே ஆழத்துப் பிள்ளையார் கோயில் அமைக்கப்பட்டிருக்க வேண்டும். கல்யாண மண்டபம் வேண்டுமானால் பிற்காலத்தில் தோன்றி இருக்கலாம்.

புலவர் பா. அன்பரசு, M.A., B.Ed.
சேலம்.

விருத்தாஜலம் கோயிலில் மூன்று திருச்சுற்றுகள் காணப்படுகின்றன. ஆனால் வெண்சனூரில் இரண்டுதான். அறுபத்து மூவர் திருவுருவங்கள் விருத்தாஜலத்தில் உள் திருச்சுற்றில் இருப்பது போலவே வெண்கனூரிலும் உள்ளன. விருத்தாஜலத்தில், அம்பிகைக் கோயில், முதல் திருச்சுற்றின் வடமேற்கில் இருக்க, வெண்கனூரில் உள் திருச்சுற்றில் வடமேற்கில் அமைந்துள்ளது.

நிலத்தடியில் இருந்து லிங்கமும் பிற படிமங்களும் கண்டெடுக்கப்பட்ட காரணத்தால் இறைவர் வடிவம் அயம்பு வடிவம் என்று அழைக்கப்படுகிறது. மேலும், பெரிய நாயகிக்கும், பாலாம்பாளுக்கும் தனித்தனி உள்நாழிகள் வெண்கனூர் கோயிலில் உண்டு.

இறைவர் பழமலைநாதர் என்று அழைக்கப்படுகின்றார்.

விருத்தாஜலக் கோயில் 'விபசித மகாரிஷி' என்பவரால் ஆதியில் கட்டப்பட்டதெனபா. பல காலக் கட்டங்களில் சோழ, நாயக்க மன்னர்களால் திருப்பணி செய்யப்பட்டது. ஆனல் வெண்கனூர்க் கோயில் இலிங்கா ரெட்டியார் திருப்பணி தொடங்க, அண்ணாமலை ரெட்டியாரால் முடிவுற்றது.

விருத்தாஜலம் கோயிலுக்கு 450 ஏக்கர் பரப்புள்ள புன்செய் நிலமும், 5 இரதங்களும் உண்டு. வெண்கனூர் கோயிலுக்கு 300 ஏக்கர் நன்செய் நிலமும் உரிமையுடையது.

விருத்தாஜலம் கோயில் நான்கு ஏக்கர் நிலப்பரப்பிலும், வெண்கனூர்க் கோயில் ஒரு ஏக்கர் நிலப் பரப்பிலும் அமைக்கப்பட்டது.

கல்வெட்டுச் செய்தி :

உள் திருச்சுற்று வாயிலில் நுழையும்முன் இடது பக்கம் வன்னி மரம் காணப்படுகின்றது. அதனடியில் விருட்ச முனிவர் தவக்கோலத்தில் காணப்படுகிறார். உள் திருச்சுற்று வாயிலின் இரு பக்கக்கல் சுவர்களிலும் கல்வெட்டுக் காணப்படுகிறது.

"ஸ்வஸ்தி ஸ்ரீ மகா மண்டலேசுவர அரியராய ரவி பாடன் பாஷைக்குத் தப்புவராய கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு கொடாதான் பூர்வ தக்ஷிண பச்சிம உத்தர சதுச்சமுத்திராதிபதி ஸ்ரீ வேங்கடபதி தேவ மகாராயர் பிருதிவி ராஜ்யம் பண்ணியருளா நின்ற சாலிவாகன சகாப்தம் 1545 ஆகிய ருத்ரோத்தாரி வருடம் ஆகிய வைகாசி மாதத்தில் செய பண்டகுலத்து லிங்கா ரெட்டியார்....... .. ரிஷப ஞாயிற்று பூர்வ பக்ஷத்து துவாதசியும் அந்த நட்சத்திரமும் பெற்ற குரு வாரத்து நாள் விருத்தாஜலத்துக்குப் பிறுதி நாமமான வெண்கனூரில் உடையவர் பழமலைநாத. சுவாமியார் பெரியம்மை நாச்சியார் முதலான தேவதைகளையும் உற்சவ விக்கிரகங்கள், விக்கினேசவர முதலான சண்டேசுரன் பரியந்தம் உண்டான விக்கிரகங்கள் . பிழை பொருத்த குருக்கள், கையினலே உத்ஷை பண்ணிவித்து, உள் மண்டபம் மகா மண்டபம் நீர்த்த மண்டபம் உள் பிரகாரம கோபுரம் முதலான......பத்திர பாரம்பரியமான சந்திராதித்தவரையும் அனுபவித்துக் கொண்டு வரக் கடவதாம்".



கோயிலின் தெற்குத் திருச்சுற்று. உள்நாழிச் சுவரில் காணப்படும் சிற்ப வேலைப்பாடு. தூண் அடிப்பகுதியின் நுணுக்கமான வேலைப்பாடு, யாளிகளின் வாயிலிலிருந்து வரும் கொடிகள், மேற்புறமுள்ள போர்க்களக் காட்சிகள்.

கோயில் உள்சுற்றில் நுழைந்ததும் நமது உலது பக்கத் தூண்களில் காட்சியளிக்கின்றன. தூணில் இலிங்கா ரெட்டியார் உருவம் செதுக்கப்பட்டிருப்பதால் கோயில் திருப்பணி செய்யப்பட்ட போதும்,

முடிக்கப்பட்ட நிலையிலும் அவர் உயிருடன் இல்லை என்பதை அறியலாம். திருப்பணி ஆரம்பித்தவர் இலிங்கா ரெட்டியாரே ஆவார்.

உள் சுற்றுச் சுவரில் நாயன்மார்களின் வாழ்க்கை வரலாற்று ஓவியங்கள் காணப்படுகின்றன. அவை சுமார் 80 ஆண்டுகள் பழமை உடையவை ஆகும்.

### மூர்த்தி சிறிது; கீர்த்தி பெரிது :

பழமலை நாதரின் உள் நாழி (கர்ப கிருகம்)யின் பின்பகுதி அரைவட்ட வடிவம் கொண்டது. அதன் வெளிப்புறக்கல் சுவரில் பல அழகிய சிற்பங்கள் காணப்படுகின்றன. யாளிகளின் வாயிலிருந்து வரும் பூ வேலைப்பாடுகள், கடைசல் வேலை செய்யப்பட்ட தூணகளும், சுமார் 1 அடி சதுரப் பரப்பில் போர் வீரர்களின் போர்க் களக்காட்சிகளை விளக்கும் சிற்பங்களும் குறிப்பிடத் தக்கவையாகும். மூர்த்தி சிறிது; கீர்த்தி பெரிது என்பது போலச் சிற்பங்கள் சிறியதாகவும், வேலைப்பாடுகள் பெரிதாகவும் காணப்படுவதாலேயே 'வெண்கனூர் வேலையழகு' என்ற பெயர் இக் கோயில் சிற்பங்களுக்கு ஏற்பட்டது போலும்.

உள் சுற்றில் வட மேற்கில் பெரியம்மை (அன்னையின் பெயர்)கோயில் காணப்படுகிறது. வட கிழக்கு மூலையில் நடராசர் கோயில் உள்ளது. வழக்கமாக எல்லாக் கோயில்களிலும் ஐம்பொன் திருமேனிதான் காணப்படும். ஆனால் இங்கு நடராசர் உருவம் சுமார் 3 அடி உயரத்தில் கல் சிற்பமாகக் காட்சி தருகிறது. இச்சிற்பம் உருண்டை வடிவச் சிற்பமாகச் (Round sculpture) செதுக்கப்பட்டு அழகுடன் காட்சி தருகிறது. நடராசர் திருவுருவத்திற்குப் பின் (2'×3' கல் தளம்) சுரங்கப்பாதை உள்ளதாகக் கூறுகின்றனர்.

### சிவப்பிரகாசரும், வெண்கனூரும் :

துறை மங்கலம் சிவப் பிரகாச சுவாமிகளைப் பற்றி அறியாத தமிழறிஞர் இல்லை எனலாம். இவருடைய சொந்த ஊர் காஞ்சிபுரம். இவரது காலம் கி. பி. 17ஆம் நூற்றாண்டு. இப்புலவர் வீரசைவர். இவருடைய தந்தையார் குமாரசாமி தேசிகர். உடன் பிறந்தவர்கள் வேலையசுவாமிகள், கருணைப் பிரகாசர், ஞானம்பாள் ஆகியோர்.

சிவப்பிரகாசர் காஞ்சியை விட்டு உடன் பிறந்தவர்களுடன் புறப்பட்டுத் திருவண்ணாமலையில் தங்கியிருந்தபோது பாடிய சோண சைலத் திருவண்ணாமலையைப் பாடியுள்ளார். 'ஏசுமத நிராகரணம்' என்னும் கண்ட நூலும் இவரால் பாடப்பட்டதாகும்.

சிவப் பிரகாசர் திருவண்ணாமலையை விட்டுப் புறப்பட்டு, துறைமங்கலத்தில் தங்கி இருந்தபோது, வெண்கனூர் திருப்பணியைச் செய்த அண்ணாமலை ரெட்டியார் சுவாமிகளை அணுகித் தம்மை ஆட்கொள்ள வேண்டினார்.

தமது குருவாகிய சென்னபசவையர் மடத்திற்கு மேற்கில் ஒரு மடத்தைக் கட்டுவிக்கச் செய்து, அதில் சிவப்பிரகாசரைத் தங்கச் செய்தார். அண்ணாமலை ரெட்டியார் திருவெண்கையில் தங்கி இருந்தபோது சுவாமிகள் பாடியருளிய நூல்கள் திருவெங்கைக் கோவை, திருவெங்கைக் கலம்பகம், திருவெங்கை உலா, திருவெங்கை அலங்காரம் என்பவை ஆகும்.

கோயில் கல்வெட்டில் 'வெண்கனூர்' என்று குறிக்கப்பட்டிருக்க, சிவப் பிரகாசர் 'வெங்கனூர்' என்றே தமது பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். தாம் பாடிய திருவெங்கை யுலா என்னும் நூலில் சிவப் பிரகாசர் அண்ணாமலை ரெட்டியாரை,

"..................வினவினவர்க்குப்
பண்டைமறத்தின் படிவம் இது
என்ன உருக்
கொண்ட இலிங்கையன் குலமைந்
தன்' (13-16)
"....................கரும்பு அயிலக்
கூலி கொடுக்கும் குலத்தோன்றல்"
(60-61

என்றும் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

"வல்லகோல் அண்ணாமலை வள்ளல்-
மல்லலுறச்
சந்நி பொருத்தித் தரும் சீர்கெடாது
அநேகப்
புந்தி மகிழ அற்புத அணித்தா-முந்
தையோர்
செய்யுள்போல் செய்த திருக்
கோயில்" (66-70)

என்று கோயிலைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். 'முந்தைப் புலவர்களின் செய்யுள்கள் கட்டமைப்புடன் காணப்படுவது போல இத்திருக் கோயில் அற்புத அழகுடன் சீர் கெடாது விளங்குகின்றது' என்று சிறப்பித்துள்ளார் சுவாமிகள்.

தாம் இயற்றிய திருவெங்கைக் கலம்பகத்தில் வெங்கனூரின் சிறப்பை "வெற்றியாகிய முத்தி தந்தருள் வெங்கை மாநகர்", என்று சுவாமிகள் பாராட்டியுள்ளார்.

அண்ணாமலை ரெட்டியார் காலத்தில் ஒரு சமயம் தேர்த்திருவிழா நடைபெற்றது. தேர் பவனி வரும் தெருக்களில், தேரோட்டத்திற்கு இடையூறாக இருந்த மரங்களைக் கோயில் அதிகாரிகள் வெட்டச் செய்தனர். இதற்கு சிவப்பிரகாசரின் மடத்திற்கு முன்புறமிருந்த ஒரு முருங்கை மரமும் பலியாகி விட்டது.

வெளியில் சென்றிருந்த சுவாமிகள் தாம் வாஞ்சையுடன் வளர்த்த முருங்கை மரம் இல்லாததைக் கண்டும், நடந்த நிகழ்ச்சியையும் அறிந்து மனம் வருந்தினார். சம்பந்தப்பட்டவர்களுக்குப் புத்தி புகட்ட நினைத்தார். உடனே நீம்காணும் பாடலை ஓர் ஏட்டில் எழுதினார்.

# திருமலையில்

## தி. தி. தேவஸ்தான

# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| எண் காட்டேஜ விவரம | கட்டணம (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| டி. பி. சி. | ரூ.25/- ரூ.15/- ரூ.10/- |
| டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | ரூ. 20/- |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | |
| பெரியன | ரூ. 40/- |
| சிறியன | ரூ. 20/- |
| ஹில வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 20/- |
| சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| அஞ்சனாத்ரி காட்டேஜ் | ரூ. 20/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| திருமணக் கூடம் (3வது சத்திரம்) | ரூ. 15/- |
| சிறப்பமைப்புகொண்ட காட்டேஜுகள் | ரூ. 75/- |
| டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |
| **எஸ். வி. விருந்தினர் விடுதி,** | |
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| மோடிபவன் | ரூ. 100/- |
| **திருமணக்கூடஙகள் (காட்டேஜுகள்)** | |
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ் எண: 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ் எண்: 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ் எண; 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண் : 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண : 93 | ரூ. 80/- |
| டி. பி. (உள் பக்க காட்டேஜ்) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| ஏ. டி. சி. மற்றும் டி. பி. சி. ஒரு அறைத் தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 12/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

'' திருந்து தமிழ் இலக்கண ஐந்திணைக்
கோவை
விருத்தகிரி செல்வர்க்கு ஓதும்
பெருந்தகைமை உடையம யாம விடும்
ஓலை
வெஙகைநகர் பிடாரி காண்க.
இரும்புவியில ஒரு முருங்கைக்
கொம்பொடியாது
இங்கிருக்கும் நீ நம
முருங்கைதனை வேரோடு களைந்ததனை
எனறால்
உமக்கு முறைமை தானோ?''

இப்பாடல் எழுதப்பட்ட ஓலையை ஒரு நபர் மூலம் அண்ணாமலை ரெட்டியாரிடம் கொடுத்துப் பவனி வரும் தேரின் மீது வைக்கும்படியும் சொன்னார் சுவாமிகள். அவர் கூறியபடியே அவ்வோலையைத் தேரின்மீது வைக்கப்பட்டவுடன் தேர் தீக்கு இரையாயிற்று என்றும் கர்ண பரம்பரைக் கதைகள் தெரிவிக்கின்றன.

வெண்கனூரில் ஜமீன்தார் குடும்பத்தார் வாழ்ந்த வீடுகள் இருந்த தெரு இன்று ஊரின் ஒதுக்குப் புறமாகக் கோயிலின் தெறகில் காட்சியளிககின்றன.

மயிலம் தமிழ்க் கல்லூரியின் முன்னாள் முதல்வர் திரு துரைசாமி (மயிலம் சுவாமிகள) இப்பகுதியில் உள்ள ஒரு எளிய வீட்டில் வசிதது வருகிறார். எணபது வயதை எட்டிப் பிடிககும அவர் இவ்வூரைப பறறிய பல தகவலகளை அனபோடு தெரிவித்தார்.

வரலாற்றுச் சிறப்புப் பெற்று ஆய்வாளர்களுக்குக் கலைக் களஞ்சியமாக விளங்கும் வெண்கனூர் இனறு கேட்பார் இலலாமல கிடக்கிறது. பழமலைநாதரின உள நாழியின பீடத்தைச சுற்றிச் செதுககப்பட்டுளள அழகு வாய்நத கிளிகளின சிறகுகளும, தலைகளும் வெட்டப்பட்டுக கிடப்பதற்கு ஊரா மககள கூறும காரணம கிளிகள இறககை இருந்தால் பறநது விடும் என்பதாகும.

கலையைப் பரம்பொருளோடு தொடர்பு படுத்தி அமைககப்பட்ட சிறபஙகள் இனறு இந்நிலையை அடைந்து விட்டதற்குக் காரணம் நமது கவனக குறைவே ஆகும்.

# ★ மார்கழியும் மங்கையரும் ★

மார்கழி மாதத்தில் உஷத் கால (விடியற்காலை 4-30 மணி) பூஜை விசேஷமானது. அம்மாதத்தில் ஒரு நாள் காலையில் நமது இஷ்ட தெய்வத்திற்கும் பூஜை செய்தால் ஒரு அச்வமேத யாகம் செய்த பலன். தேவர்களுடைய கணக்கில் மார்கழி மாதம் முழுவதும் ஒருநாளாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. இது ஒரு முறை

மற்றொரு முறை பாகவதர்கள் காலையில் எழுந்து காலைக்கடனை முடித்துக் கொண்டு அவரவர்கள் ஊரிலுள்ள கோவிலை பஜனை செய்து கொண்டு பிரதக்ஷிணமாக வந்து வழிபடுவார்கள்.

கிருதயுகத்தில் தியானம் செய்வதாலும் த்ரேதாயுகத்தில் யாகங்கள் செய்வதாலும், துவாபர யுகத்தில் அர்ச்சனை செய்து வழிபடுவதாலும் எவ்வித பலனை அடைய முடியுமோ அவ்வித பலனை கலியுகத்தில் நாராயணனை பஜிப்பதால் பெற முடியும்.

**कलौ कल्मषचित्तानां पापद्रव्योपजीविनाम् ।**
**विधिक्रियाविहीनानां गतिर्गोविन्दकीर्तनम् ॥**

மனதில் கெட்ட எண்ணமுடையவர்களும், பாப கார்யங்களைச்செய்து வாழ்க்கை நடத்துபவர்களுக்கும், தன் மதத்தில் கூறிய கர்மாக்களைச் செய்ய முடியாதவர்களுக்கும், செய்யாதவர்களுக்கும் கோவிந்தனை பஜனை செய்து வழிபட்டால் போதும் அவர்களுக்கு நற்கதி கிடைக்கும். ஆகையால் இந்த முறை மிகவும் சுலபமானது. ஆனால் இம்முறை கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து வருகிறது.

இவ்விதம் செய்து முப்பது நாட்களும் முடித்து கடைசியில் ராதா கல்யாணம் என்ற விழாவினை பாகவதர்கள் நடத்துவார்கள். இந்த ராதைக்கும் மார்கழி மாதத்திற்கும் என்ன சம்பந்தம் தெரியவில்லை. ஆனால் மார்கழி மாதம் முப்பது நாட்களும் நோன்பிருந்து கடவுளை வழிபட்டால் இறைவனின் அருளால் கன்னிப் பெண்கள் நற்கணவனையடைவார்கள் என்று கூறப்பட்டுள்ளது. இம்முறையைத்தான் திருஆண்டாள் செய்தாள். பாகவதத்தில் பத்தாவது ஸ்காந்தத்தில் காத்யாயனி நோன்பு என்று ஒன்று கூறப்பட்டுள்ளது.

''ஏ! காத்யாயனி! மகாமாயையே! உலகிற்கும் ஆதாரமானவளே! தேவி! பராசக்தியே! எங்களுக்கு நந்த கோபனுடைய மகனை ஸ்ரீ கண்ணனைக் கணவனாக அருள்வாய்'' இக்கருத்தை ''எற்றைக்கும் ஏழ் ஏழ் பிறவிக்கும் உன் தன்னோடு உற்றோமே ஆவோம்'' என்ற திருப்பாவைத் தொடரில் காணலாம். ''உன்னை நாங்கள் வணங்குகிறோம்'' என்ற மந்திரத்தைச் சொல்லிக் கொண்டு பூஜைகள் செய்வார்கள் பெண்கள்.

ஆகையால் மகளிருக்கும் மார்கழி மாதத்திற்கும் ஏதோ ஒரு சம்பந்தமிருக்கிறது. இந்த ராதை யார்? இவளுடைய பக்தி எத்தகையது? இவளுக்கும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் என்ன சம்பந்தம் என்பதை கொஞ்சம் பார்ப்போம். இந்த ராதா கல்யாணத்திற்கு ஸ்ரீ ஜயதேவருடைய கீத கோவிந்தம் (அஷ்டபதி) என்ற காவ்யத்தை ஆதாரமாகக் கூறுகிறார்கள். இக் காவ்யத்தில் எட்டு அடிகளைக் கொண்ட 24 அஷ்டபதிகள் (பாட்டுகள்) இருக்கின்றன. இவைகளைப் பாடி முடிவில் ராதா கல்யாணம் என்ற விழாவினை நடத்துகிறார்கள்.

நம் பாரத நாட்டில் இறைவனை வழிபடும் முறையில் ஒன்பது விதம் கூறப்பட்டுள்ளது.

**श्रवणं कीर्तनं विष्णोः स्मरणं पादसेवनम् ।**
**अर्चनं वन्दनं दास्यं सख्यमात्मनिवेदनम् ॥**

ஆதாவது, நாராயணனுடைய கதைகளைக் கேட்பது, அவருடைய நாமாக்களை பாடுவது அல்லது கூறுவது, அவருடைய உருவத்தை நினைப்பது, அவருடைய உருவத்தைவைத்து வழிபடுவது, அவரை வணங்குவது, அவருக்கு அடிமை (தாஸனாக) யாக இருப்பது, தோழமையாக வழிபடுவது, தன்னையே அவருக்கு அர்ப்பணிப்பது போன்றவைகள்.

டாக்டர். டி. ஜி. அனந்தசுப்ரமண்யன்,
திருப்பதி.

மனிதன் தன் மனதில் ஓர் உருவத்தை நினைத்து வழிபடுவதே உபாஸனை என்பதாகும். இது பலவிதமுண்டு. வேதங்களும், உபநிஷத்துக்களும் பரப்ரம்மம் (பரம்பொருள்) என்பதைப் பற்றியே கூறுகிறது. 'आनन्दो ब्रह्मेति व्यजानात्" என்று தைத்திரிய உபநிஷத் கூறுகிறது. ஆனந்தம் என்று பிரம்மத்தைக் குறிக்கும் போது அது ஆண்பாலாக இருக்க வேண்டும். 'आनन्दः' இந்த புருஷ வாசக சப்தமே நாராயணன் என்று கூறுகிறது. பாரதம்: "स हि नारायणो ज्ञेयः सर्वात्मा पुरुषो हि सः" இந்த நாராயணனே ஸ்ரீ கிருஷ்ணன் என்று கோபால தாபினீ உபநிஷத் ("कृष्ण एव परमो देवः") என்று கூறுகிறது. இந்த நாராயணன் தனியாக இருப்பதில்லை. இவன் பெண்பாலோடு

சேர்ந்து விளங்குகிறன் என்பதை புருஷ ஸூக்தத்தில் காணலாம். "श्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ" என்று. இந்த பரம்பொருளான நாராயணன் பெண்பாலோடு சேர்ந்து கணவன் - மனைவி என்ற சம்பந்தத்தை ஏற் படுத்திக் கொள்கிறது. இவ்விப ரத்தை பிருஹதாரண்யக உபநிஷத் தின் நான்காவது பிராம்மணத்தில் பார்க்கலாம்.

இம்மாதிரியான இரட்டை (கண வன்-மனைவி) உறவை புராணங்களும், இதிஹாஸங்களும் ஒவ்வொரு வித மாகக் கூறுகின்றன. இவ்விரட்டை உறவில் ராதா - கிருஷ்ணன் என்ற முறையில் சிலநூல்கள் கூறுகின்றன.

ஒன்று பட்ட உருவமே ராதை - கிருஷ்ணன் என்ற பெயரில் இரண் டாகப் பிரிந்து லீலைகளைச் செய்கிறார் கள்.

ராதையே கிருஷ்ணன், கிருஷ் ணனே ராதை என்ற கருத்தில் இரு வரும் ஒருவராக இணைந்து லீலைகளை செய்ததாகக் கூறப்படுகிறது. ராதை கிருஷ்ணன் இருவருமே இன்பச்சுவை யின் உருவமே. ருக் பரிசிஷ்டம் என்ற நூலில் கீழ்வருமாறு கூறப்பட் டுள்ளது.

'राधया माधवो देवो माधवेनैव राधिका।
विभ्राजते जनेषु योऽनयोः पश्यते भेदं न
भुक्तस्स्यात्संसृतौ॥

கிருஷ்ணனுக்கும் ராதைக்கும் ஓர் இடைவெளியைப் பார்ப்பது வெளித் தோற்றமே என்பதை கிருஷ்ணோப நிஷத் கூறுகிறது.

எவனொருவன் கிருஷ்ணனுக்கும் ராதைக்கும் பேதமில்லாமல் வழிபடு கிறானோ அவன் மோக்ஷத்தையடை யான் என்று கர்கஸம்ஹிதை கூறு கிறது.

கிருஷ்ணனும் ராதையும் ஒருவரே. இருவருக்கும் எவனொருவன் பேதத் தைத் தோற்றுவிக்கிறானோ அவன் பிரம்மஹத்தி தோஷமுடையவனுக் கும், கள் குடிப்பவனுக்கும், தங்கத் தைத் திருடுபவனுக்கும், கர்மங்கள் செய்யாதவனுக்கும் சமமாகிறான் என்று கோபாலஸஹஸ்ரநாமம் கூறு கிறது.

கிருஷ்ணனும் ராதையும் ஒருவரே என்று பிராம்மாண்ட புராணம் கூறு கிறது.

ஸ்காந்த புராணத்தில் வைணவக் கண்டத்தில் ராதை கிருஷ்ணனுடைய ஆத்மாவான ராதையுடன் லீலைகள் செய்வதால் கிருஷ்ணனுக்கு ஆத்மா ராமன் என்று பெயர்.

ராதையும் கிருஷ்ணனும் ஒருவருக் கொருவர் நேசித்து ஸேவை செய்து கொள்கிறார்கள் என்று ப்ரம்ம வைவர்த புராணம் கூறுகிறது.

நாரதீய புராணத்தில் ராதையும் கிருஷ்ணனும் பாலும் வெண்மையும் போலும, பூமியும் வாஸனையும் போலும் சேர்ந்து உயிரோடு உயி ராய் நேசிக்கிறார்கள் என்று கூறப் பட்டுள்ளது.

ராதைக்கும் கிருஷ்ணனுக்கும் நெருங்கிய தொடர்பு தோழன் - தோழி என்ற முறையில் அமைந்தது, இதை ஸகீபாவம் "सखीभाव" என்று கூறுவர். பாகவதப் பக்தர்கள் ஒன்பது வித பக்தியில் தோழமை பக்தி என்று ஒன்று உண்டு. இந்த பக்தியைக் தான் அர்ஜுனன் கிருஷ்ணனிடம் வைத்திருந்தான்.

கோபிகைகள் கிருஷ்ணனிடம் அன்புசெலுத்தியது இந்த தோழமை பக்தியோடுதான். ராதையும் இநத பக்தியினால்தான் கிருஷ்ணனுடன் லீலைகள் செய்தாள். இந்த லீலைக்கு "ராஸக்ரீடை" என்று கூறுவார் கள். சிருங்காரரஸத்தை அடிப்படை யாகக் கொண்டது. இறைவன் ரஸ மயமானவன் என்று உபநிஷத் கூறு கிறது.

'रसो वै सः रसं ह्येवायं लब्ध्वा आनन्दी
भवति।

ரஸமயமான கிருஷ்ணன் தன்லீலைக்கு ராதை என்ற பெண் உருவத்தை உண்டாக்கி அதோடு லீலைகள் செய் கிறான்.

'तस्मात् एकाकी न रमते द्वेधाऽपातयात्त"

என்று பிருஹதாரண்யகோப நிஷத் கூறுகிறது. வைணவ ஸம்ப்ரதாயத் தில் தாஸ பக்தி மிகவும் முக்ய மானது. ஸகீ பாவ பக்தியை அடிப் படையாகக் கொண்டதே பாகவத, சைதன்ய, நிம்பார்க மதங்கள்.

ராதைக்கும் - கிருஷ்ணனுக்கும் உண்டான தோழமை பக்தியை வைதிக மதம் ஒப்புக்கொள்வதில்லை, இந்த முறை பிற்காலத்தில் ஏற்பட் டதே.

ஸ்ரீமத்பாகவதத்தில் பதினொன்ற வது ஸ்கந்தத்தில் இருபதாவது அத்யாயத்தில் ஸ்ரீகிருஷ்ணன் ஞானம், கர்ம இவைகளில் ஈடுபாடு இல் லாதவர்களுக்கு பக்தி என்பது என்னை அடைவதற்கு வழியாகும் என்றுகூறுகிறார். இந்தபக்தியை யார் வேண்டுமானாலும் செய்யலாம்.

பக்தி என்பது இறைவனிடம் தன் னையே அர்ப்பணித்துக் கொள்வ தாகும். இந்த பக்தியே கலியுகத் தில் மிகவும் தேவையானதாகும்.

ராதா "राधा" என்ற பதத்திற்குப் பொருள் கூறப்படுகிறது. "राधृ, साधृ संसिद्धौ" என்ற தாது "வினை" யிலிருந்து உண்டானதாகும். இதற் குப் பொருள் ஆராதிப்பது அல்லது வழிபடுவது என்பதாகும். மற்றொரு விதமாகவும் கூறலாம். 'कृष्णं समाराधयतीति' "कृष्णेनाराध्यत" इतिराधा" என்று. இதற்குச் சான்றாக ராதிகோபநிஷத் கூறுகிறது.

"तास्वाह्लादिनी वरीयसी परमान्तरंगभूता
राधा,
कृष्णेन आराध्यत इति राधा, कृष्णं
समाराधयति
सदा इति राधिका गान्धर्वे व्यपदिश्यत इति"

பரம புருஷனுன ஸ்ரீ கிருஷ்ணன் ராதையாக அவதரித்து தன்னையே தான் ஆராதிடபதாகக் கூறுகிறது ஸாம ரஹஸ்யோபநிஷத்.

ராதை என்ற பதத்திற்குப் பல விதமான பொருள்கள் காணப்படு கின்றன. பிரம்மவைவர்த புராணத் தில் கீழ்வருமாறு கூறப்படுகிறது.

'रा इत्यादानवचनो "धा" च निर्वाणवाचकः।
ततोऽवाप्नोति मुक्तिं च तेन राधा प्रकीर्तिता'

''ரா'' என்றால் கொடுப்பது, 'தா' என்றால் மோக்ஷம். இவ்விரண்டும் சேர்ந்த ''ராதா'' என்றால் மோக்ஷத் தைக் கொடுப்பது என்று பொருள். அதே புராணத்தில் மற்றுமொரு இடத்தில்

"रेफो हि कोटिजन्मार्घं कर्मयोगशुभाशुभम्।
आकारो गर्भवासं च मृत्युं स रोगमुत्सृजम् ॥
धकारमायुषीहानिमाकारो भवबन्धनम्" ॥

என்று வருகிறது.

(ர் + ஆ = ரா) (த்+தா=தா) (र+आ=रा,ध्+आ=धा=राधा). ர் என்றால்கோடி ஜன்மங்கள் செய்த பாபங் கள் கர்மங்களால் நல்லவை, கெட் டவை முதலியவைகளின் அநுபவங் கள். 'ஆ' என்றால் கர்பவாஸம், மணம், ரோகம்.''த்'' என்றால் அல்ப வயது.'ஆ' என்றால் ஸம்ஸார பந்தம். இவற்றை நாசம் செய்வது ''ராதை'' என்றசொல். நாரத பஞ்ச ராத்ரத்தில்

'राशब्दोच्चारणाद् भक्तो
भक्तिं मुक्तिं च राति सः।
धा शब्दोच्चारणेनैव धावत्येव हरेः पदम्' ॥

என்று வருகிறது.

'ரா', என்ற எழுத்து பக்தி, முக்தி இவைகளைக் கொடுக்கிறது. ''தா'' என்ற எழுந்த ஸ்ரீ கிருஷ்ணனின் பாதங்களை அடைவிக்கிறது.

இம்மாதிரியாக ராதை என்ற சொல்லிற்கு விளக்கங்கள் கூறப்படு கின்றன. மேலும் ராதைக்கு 27 பெயர்கள் கூறப்பட்டுள்ளன.

துர்கையாகவும், லக்ஷ்மியாகவும், ருக்மிணியாகவும் ராதை சொல்லப் படுகிறுள.

रुक्मिणी द्वारावत्यां तु राधा बृन्दावने वने।

என்று மத்ஸ்ய புராணமும்,

लक्ष्मी सरस्वती दुर्गा सावित्री राधिका परा॥

என்று நாரத பாஞ்ச ராத்ரமும் கூறு கிறது.

ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் ராதைக்கும் ஏற்பட்ட தோழமை சிறு வயதில் தான். இத்தகைய பெருமை வாய்ந்த ராதை ஸ்ரீமத் பாகவதத்தில் காணப் படவில்லை. ஆனுல் கிருஷ்ணன் பல கோபிகைகளுடன் விளையாடினுன் என்று கூறப்பட்டுள்ளது. அவர் களில் ஒருவளாக ராதை இருக்க லாம்.

கோபிகைகள் கிருஷ்ணனிடம் சிருங்கார பக்தி கொண்டு லீலைகள் செய்கிருர்கள். இதற்கிடையில் ஒரு கோபிகை மட்டும் கிருஷ்ணனை அழைத்துச் செல்லுகிருள். தனியாக சென்று அவனுடன் லீலைகள் புரி கிருள். இருவரும் ஒன்ருகி விடுகிருர் கள். இருவரும் பிரிந்து செல்ல வேண் டிய நேரத்தில் கோபிகை வருந்து கிருள் ''கிருஷ்ணு! உன் பிரிவை என் னுல் தாங்க முடியாது என் தோளில் ஏறிக்கொள்'' என்கிருள். இதனுல் அந்த கோபிகை ராதையாகத் தான் இருக்க வேண்டுமென்று ஊஹிக்க இடமளிக்கிறது. இந் நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு கிருஷ்ணன்-ராதை என்ற கற்பனை உதயமாகிறது. இவ்விரு வர்களைக் கொண்டே காவ்யங்



ஸ்ரீ மீனுட்சி அம்மன் கோவில் - மதுரை.
திரு. வி. முத்துராமன் - கோவை.

களும் உண்டாகியன எனலாம். ஜய தேவர் என்ற கவி கிருஷ்ணன்-ராதை என்ற காதலன்-காதலியை வைத்து கீத கோவிந்தம் (அஷ்டபதி) என்ற காவ்வியத்தை இயற்றினார். அவர் தன் முதல் ஸ்லோகத்தில் கூறுகிறார்.

'मेघैर्मेदुरमम्बरं वनभुवः श्यामा स्तमालद्रुमैः
नक्तं भीरुरयं त्वमेव तदिमं राधे गृहं प्रापय।
इत्थं नन्दनिदेशतश्चलितयोः प्रत्यध्वकुञ्जद्रुमं
राधामाधवयोर्जयन्ति यमुनाकूले रहःकेलयः॥

நந்தகோபன் பசுக்களை ஓட்டிக் கொண்டு தன் பரிவாரங்களுடன் காட்டிற்குச் செல்லுகிறான். இவர்களில் ராதையும்-கிருஷ்ணனும் இருக்கிறார்கள். மாடுகளை மேய்த்துக் கொண்டிருக்கும்போது மாலை நேரம் ஆகிவிடுகிறது. அத்துடன் வானமும் மப்பும் மந்தாரமாகி இருட்டி விடுகிறது. மேலும் மாவிலிங்க மரங்களால் இருட்டு அதிகமாகத் தெரிகிறது. அப்பொழுது நந்தகோபன் "ஏ ராதே! வானம் இருண்டு மழை வரும் போலிருக்கிறது. ஆகையால் நீ கிருஷ்ணனை அழைத்துக்கொண்டு வீட்டிற்குச்செல்வாய்'' என்று கூறுகிறான்.

ராதையும் கிருஷ்ணனை அழைத்துக் கொண்டு ஒவ்வொரு புதர்களிலும் லீலைகள் செய்து கொண்டு செல்லுவதாகக் கூறுகிறார். இவ்விருவர்களை வைத்தே சிருங்கார (இன்ப) காவ்யமாக எழுதியுள்ளார்.

கிருஷ்ணன் இல்லற இன்பத்தில் கட்டுண்டவனாக ராதையை மனதில் இருத்திக் கொண்டு மற்ற கோபிகைகளை விட்டு விட்டான் என்று பாகவதமும் கூறுகிறது.

இங்கு ராதை செய்த பக்தியை தோழமை (सखी) பக்தி என்று கூறலாம்.

இதே மாதிரி ஸ்ரீ ஆண்டாள் ரங்கனுக்கு அர்ச்சனை செய்து, அழகுப்படுத்தி தாஸ பக்தியைக் கையாண்டாள்.

'எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்
தன்னோடு உற்றோமே யாவோம்,
உனக்கே
நாம் ஆட்செய்வோம்'

என்று திருப்பாவையில் ஆண்டாள் கூறுகிறார்.

மாணிக்க வாசக ஸ்வாமிகள், திருவெம்பாவையில், வந்தனம் என்ற பக்தியை செய்து வழிபடுகிறார்.

'தில்லைச் சிற்றம்பலத்தே தீயாடும்
கூத்தன்
அணி குழல்மேல் வண்டார்ப்பப்
பூத்திகழும் பொய்கை குடைந்துடை
யான்
பொற்பாதம் ஏத்தி''

''நமது பிறவிப் பிணி நீங்குவதற்காகவே இறைவன் சிதம்பரத்தில் கூத்தாடுகிறான். அவனது ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று விளையாட்டுக்களையும் வாழ்த்தி'' என்று கூறுகிறார்.

இங்கேயும் மாணிக்கவாசகஸ்வாமிகள் தன்னைப் பெண்ணாகவே கருதி திருவெம்பாவையைப் பாடுகிறார்.

மீராவும் அர்ச்சனை என்ற பக்தியைக் கொண்டு தன்னுடைய பாட்டுக்களால் அர்ச்சித்து அவனிடமே மோகங் கொண்டு கிருஷ்ணனுடன் இரண்டறக் கலந்தாள். தோழமை (ஸகி) பக்தி செய்பவர்கள் தன்னைப் பெண்ணாகவே நினைத்து வழிபடுவார்கள். பெண்கள் இறைவனிடம் பக்தி கொள்ளும் பொழுது முதலில் ஸகி பாவத்தை மேற்கொண்டு பின் இறைவனுடன் சேர்ந்து விடுவார்கள். இவர்களுடைய பக்திக்கு இறங்கி இறைவன் இவர்களை தன்னுடன் சேர்த்துக் கொண்டு விடுவான்.

வடக்கே தோழமை (ஸகி)பக்திக்கு அதிக முக்ய இடமுண்டு. அத்தகைய வரிசையில் ராதை கிருஷ்ணனிடம் பக்தி செய்து இரண்டறக்கலந்து விட்டாள். இந்த பக்திக்கு ஆதாரம் பகவத் கீதையில் கிருஷ்ணன் கூறுகிறான். 'सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज" என்று. ''உன்னுடைய எல்லாவித தர்மங்களையும், கர்மாக்களையும் விட்டு என்னையே சரணமாக அடைவாய்'' என்று அதற்குப் பொருள்.

மகளிர் மார்கழி மாதம் காலையில் எழுந்து புனித நீராடி இறைவனை வணங்கி நோம்பு எடுத்து வழிபடும் பழக்கம் முற்காலத்திலேயே இருந்திருக்கிறது என்று தெரிகிறது. இதற்கு ராதை ஒருவளே ஆதாரமாகக் கூறலாம. அந்த ராதைக்கும் கிருஷ்ணனுக்கும் திருமணம் என்று கூறுவது சரியில்லை. ராதை - கிருஷ்ணனுடன் இரண்டறக் கலந்து விட்டாள் என்று கூறுவதே சிறந்ததாகும். ஆண்டாள், மணிவாசகப் பெருமான், மீரா முதலானோர் இறைவனுடன் இரண்டறக்கலந்தவர்களே. இவர்கள் தோழமை (ஸகி) பக்தியைக் கையாண்டவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. ★




EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER. T. T. D. PRESS, TIRUPATI-517501.

